





## அவனுககு ஒவஙவாரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

### தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்–அவன் மனமாரச் சாப்பீடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள் !




இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.

**இன்க்ரிமின்*... வளர்ச்சிக்கு மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒ
தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

Lederle லெடர்லி டிவிஷன், ஸயனமிட் இந்தியா லிமிடெட் CYANAMID

CHCL-26 TAM

# கல்கி பொருளடக்கம்

**நினைவுத் திரையில்......**

சென்னை கவர்னர் ஸர் ஆர்ச்பால்ட் நை அவர்களை வாழ்த்துகிறோம். ஸர் நை நல்ல மனிதர்; கால நிலைமை அறிந்த லௌகிக புருஷர். பாருங்கள், பத்திரிகைக் காகிதக் கிராக்கி காரணமாகப் பத்திரிகைகளில் ஏற்பட்டிருக்கும் இட நெருக்கடியையும் பத்திரிகைக்காரர்களின் கஷ்டத்தையும் அறிந்து தமது பெயரை ஒரே அட்சரத்தில் ரத்தினச் சுருக்கமாய் அமைத்துக் கொண்டு வந்திருக்கிறார்!......

ஸர் நை தமது சுற்றுப் பிரயாணத்தின் போது தஞ்சாவூர் ஜில்லா அய்யம்பேட்டை பள்ளிக்கூடம் ஒன்றில் மாணவர்களைப் பார்த்து, நீங்கள் எல்லோரும் தினசரி முக்கால் மணி நேரம் நூல் நூற்கவும், துணி நெய்யவும் கற்றுக்கொள்ள வேண்டும் என்றும் கைத்தொழில் கல்வி அவசியம் என்றும் அதைக் கற்காமல் வெறும் ஏட்டுக் கல்வி மட்டும் கற்பதால் பயனில்லை என்றும் வற்புறுத்தியிருக்கிறார். ஸர் நை அவர்களைப் பாராட்டுகிறோம்.

கல்கி, நவம்பர் 10, 1946.

பராபவ, கார்த்திகை 5 ■ நவம்பர் 20

அமைச்சர்கள் விஷயமும்... — 3
என்ன சேதி? — 4
ராஜாஜியின் கருத்துக்கள் — 6
அமெரிக்காவில் புயல் — 9
வெண்ணிலவுப் பெண்ணரசி — 12
தேர்தல் எதற்காக? — 24
நீதி பிழைத்தது! — 28
முள்ளும் மலரும் — 34
சிவனருட் செல்வர் — 42
பகைமை பூண்ட நட்பு — 47
காற்றினிலே வரும் கீதம் — 52
பல்சுவைப் பக்கம் — 60
ஸ்வர்ணா — 63
வெற்று வெளி — 71
வட்டமேஜை — 80

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 ■ இதழ் 16



# அமைச்சர்கள் விஷயமும் அமளிப் பிரச்னையும்

நவம்பர் ஏழாந் தேதியன்று புது தில்லியில் பசுவதைத் தடுப்புக்காக நடந்த பெரும் கலவரம் மக்களின் கவனத்தைக் கவர்ந்தது. அதனை அடுத்தும், அதன் எதிரொலியாகவும் உள்துறை அமைச்சர் ஸ்ரீ குல்ஜாரிலால் நந்தா ராஜிநாமாச் செய்தார். உள்துறை அமைச்சராக அவர் என்ன சாதித்தார் என்பது பற்றி மக்களிடையே மாறுபட்ட கருத்துக்கள் இருக்கக் கூடும். எனினும் அவரது நேர்மை குறித்தும், நாட்டு மக்களிடையே தார்மீக உணர்வுகளை மீண்டும் ஏற்படுத்த வேண்டும் என்பதில் அவருக்கு இருந்த ஆர்வம் குறித்தும் கருத்து மாறுபாடே இராது.

"நம்முடைய கொள்கைகளை நாம் அமுல் செய்யும் முறையிலுள்ள சில குறைகளையும் பிழைகளையும் என் மீது சுமத்துவது அபவாதம்" என்கிறார் ஸ்ரீ நந்தா. நந்தா பதவியிலிருந்து விலக்கப் பட்டதால் அவர் கூறுவதை நாம் அலட்சியம் செய்ய முடியாது. பிரதமர் ஸ்ரீமதி இந்திரா அம்மையாரே தாற்காலிகமாக உள்துறை இலாகாவை நிர்வகிக்கப் போகிறார். காங்கிரஸின் பிடிவாதக் கொள்கைகள் மாறாமல் உள்ளவரையில் எந்த மந்திரி மாறுவதாலும் விசேஷமாகப் பயன் காண இயலாது. சோஷலிஸ மயக்கு வித்தையை அநுஷ்டிக்கும் வரை யார் உள்துறை மந்திரியாய் இருந்தால் என்ன?

மனிதர்கள் விஷயம் ஒருபுறமிருக்க, இவற்றின் அரசியல் உட்கிடையைப் பார்ப்போம். நந்தா ராஜிநாமா செய்ததால் காங்கிரஸ் கூட்டத்தின் விவகாரங்களில் பெரும் மாறுதலும், அதன் விளைவாகப் புது அமைப்பும் ஏற்படக் கூடும் என்று சிலர் நினைக்கலாம். இது தவறான எண்ணம். இவ்வாறு நன்னம்பிக்கை கொள்ள ஆதாரம் இல்லை. காங்கிரஸில் உயர் ஸ்தானம் வகிப்பவர்களிடையே பொருளாதார, நிருவாகக் கொள்கைகள் குறித்து மாறுபட்ட கருத்துக்கள் இருக்கலாம். அவர்களுக்குள் பரஸ்பரம் ஒருவரின் திறமையை மதிப்பீடு செய்து கொள்வதில் வித்தியாசம் இருக்கலாம். இவையெல்லாம் பத்திரிகையாளருக்கும், பொதுமக்களுக்கும் எப்படியோ தெரிந்து விடவும் கூடும். ஆயினும் இதனால் காங்கிரஸே பிளவு படும் என்றோ, அதன் ஒரு சாராரின் கருத்தை ஆட்சேபிக்கும் ஆரோக்கியமான எதிர்க் கட்சியாக மற்ற சாரார் அமைவர் என்றோ எதிர்பார்ப்பதற்கிடமில்லை. இவ்விதம் எதிர்ப்பு உருவானால் தான் உண்மையான சட்டசபை ஜனநாயகம் உருவாகிவிடுமே! இத்தகைய ஆரோக்கியமான முறையில் காங்கிரஸ் பிளவு படாது. ஏனெனில் அப்போது காங்கிரஸ் கூட்டம் தனது அதிகாரத்தையும் அந்தஸ்தையும் கைவிடவேண்டியதாகும். கட்சிக்காரர்களின் பரஸ்பர லாபத்துக்காகவும், அதிகாரத்தில் கட்சியை நிரந்தரமாக நீடிப்பதற்காகவும் நடத்தப்படும் காங்கிரஸ் கட்சியில் தேச க்ஷேமத்துக்குகந்த இத்தகைய அபிவிருத்திகள் ஏற்பட முடியாது. எனவே நாடு நலமுறும் வகையில் காங்கிரஸில் பிரிவினை ஏற்படும் என்று எதிர்பார்ப்பது வீண். காங்கிரஸுக்கு வெளியேதான் திறமையுள்ள, உறுதியான எதிர்ப்பு உண்டாக முடியும்; உண்டாக வேண்டும்.

மந்திரிசபை மாறுதல் தவிரச் சமீபத்தில் நிகழ்ந்து வரும் மற்றொரு முக்கிய சம்பவம், நாடெங்கிலும் ஆங்காங்கு நடைபெறும் அமளிகளாகும். அராஜகம் என்றே சொல்லிவிடக் கூடிய இந்த அமளிகளையும் ஒழுங்கீனங்களையும் காங்கிரஸார் தேர்தலில் தங்களுக்கு அநுகூலமாக்கிக் கொள்ள முயலுவார்கள். இத்தீமைகளுக்குக் காரண பூதர்களான

காங்கிரஸாரே, "பார்த்தீர்களா! நாடெங்கும் எவ்வளவு கலவரங்கள்! ஸ்தாபன ரீதியில் வலுவான எங்கள் காங்கிரஸைத் தவிர வேறு யார் இச் சூழ்நிலையில் ஒழுங்கை நிலைநாட்ட முடியும்?" என்று கேட்பார்கள். 'எங்களால் தான் தேசத்தில் அமைதியைக் காக்க முடியும்' என்று அவர்கள் பாத்தியதை கோருவார்கள். அதை வாக்காளர்கள் ஒருகாலும் ஒப்பக் கூடாது. இப்போது எவ்விதத்தில் 'அமைதி'யை உண்டாக்குகிறார்கள்? கிளர்ச்சிக் கூட்டத்தை நோக்கித் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதால்தான். எந்தக் கட்சி ஆட்சியிலிருந்தாலும், எந்த மந்திரி பதவியிலிருந்தாலும் உத்தரவை மதித்துப் போலீஸும், ராணுவமும் இது போன்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளும். காங்கிரஸுக்கு மட்டுமின்றி எந்தக் கட்சி ஆட்சியிலிருந்தாலும், யார் நிர்வாக ஸ்தானத்திலிருந்தாலும், கீழ்ப்படிந்து நடக்கக் கூடியனவாகவே நம் ராணுவமும், போலீஸும் உள்ளன. இதற்காக நாம் ஆண்டவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். எந்தச் சர்க்காருமே அதிகாரிகளை உபயோகித்துத் துப்பாக்கிப் பிரயோகம் செய்து, மக்களைக் கொல்லவும், காயப்படுத்தவும் முடியும். ஆனபடியால் இப்போது தேசம் விரும்புவது கிளர்ச்சிகள் தோன்றிய பின் அவற்றை அடக்கக் கூடிய அரசாங்கத்தை யல்ல; இது போன்ற கிளர்ச்சிகள் ஏற்படுவதற்கே இடம் தராமல் தடுத்து நிறுத்தக்கூடிய அரசாங்கத்தைத்தான் நாடு விரும்பி எதிர்பார்க்கிறது. சக்திக்கு அப்பாற்பட்ட பிரும்மாண்ட இலட்சியங்களை மக்களுக்கு ஆசை காட்டிவிட்டு, இதற்காக விலைவாசிகளை உயர்த்தி அதே மக்களின் வாழ்நிலையைப் பாழ்படுத்தி, அவர்கள் வன்முறைச் செயல்களை நாடும்படி செய்யும் சர்க்காரை மக்கள் விரும்பவில்லை. நன்கு பரீட்சிக்கப்பட்ட பொருளாதாரக் கொள்கைகளையும், மனித இயல்பையும் அடிப்படையாகக் கொண்ட அரசாட்சிதான் நாட்டின் தேவை.

# என்ன சேதி?

- கடன்! கடன்!
- மசானியின் முடிவு
- பின் யோசனை
- கலப்பட அரசாங்கமும் கலப்படப் பாலும்

நம் நாட்டுக்கு எந்த எந்த நாடுகள் எந்த எந்த ஸ்தாபனங்கள் கடன் கொடுத்திருக்கின்றன என்பது குறித்துச் சென்ற வாரம் நிதி மந்திரி சௌத்ரி மக்கள் சபையில் ஒரு பட்டியலை வழங்கினர்.

ஆஸ்திரேலியா, கானடா, செக்கோஸ்லோவேகியா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான், குவாயிட், நெதர்லண்ட்ஸ், போலந்து, ஸ்விட்ஸர்லந்து, பிரிட்டன், அமெரிக்கா, ருஷ்யா யூகோஸ்லேவியா, புனர் நிர்மாண அபிவிருத்திக்கான சர்வதேச பாங்கி, அகில உலக அபிவிருத்திக் கழகம் ஆகியவை.

இவற்றில் நெதர்லண்ட்ஸ், குவாயிட் போன்ற நாடுகள் மிக மிகச் சிறிய நாடுகள். நிலப் பரப்பிலும், மக்கள் தொகையிலும் குறைந்த இந்நாடுகளிடமெல்லாம் நாம் கடன் வாங்கி யிருக்கிறோம். என்ன பரிதாபம்!

ஆளும் கட்சியின் வேலைகளையும், பிரசாரங்களையும் கவனித்துக் கொள்ளப் பண பலத்தோடு அரசாங்க இயந்திரமே இருக்கிறது. அந்த வசதி எதிர்க் கட்சிகளுக்குக் கிடையாது. சுதந்திரக் கட்சியிலுள்ள எல்லா முக்கிய அங்கத்தினர்களும் தத்தம் தேர்தல் வேலைகளில் ஈடுபடத் தொடங்கி விட்டார்களானால் ஆளும் கட்சியின் பலத்தோடு ஈடு கொடுத்து வேலை செய்ய ஆட்கள் இல்லாமற்போய் விடுவார்கள். சுதந்திரக் கட்சி ஒரு மாகாணக் கட்சியல்ல. அது ஓர் அகில இந்தியக் கட்சி. தேச மக்கள் அதன் வளர்ச்சியிலும் வெற்றியிலும் மிகுந்த ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சமயத்தில் திரு மஸானி அவர்கள் தம் தேர்தல் வேலையில் அகப்பட்டுக் கொள்ளாமல் தேசம் முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து தேர்தல் வேலைகளையும் பிரசார வேலைகளையும் கவனித்துக்கொள்வது நலம் என்று ராஜாஜிகருதினர். ராஜாஜியின் யோசனைக்குச் செவி சாய்த்து திரு மஸானி தாம் தேர்தலில் நிற்கப் போவதில்லை என்று அறிவித்து விட்டார். இந்த முடிவை ஒரு மகத்தான தியாகம் என்று சொல்லாமல் வேறு என்னவென்று பாராட்டுவது! ஆயினும் ராஜ்கோட் தொகுதி மக்கள் மஸானி அவர்கள் தம் முடிவை மாற்றிக் கொண்டு தேர்தலில் நிற்க வேண்டும் என்று வற்புறுத்தி வருவதாக அறிகிறோம். இதைப் பற்றிச் சுதந்திரக் கட்சியின் மேலிடத்தில் மீண்டும் யோசிக்கத்தொடங்கியிருக்கிறார்கள்.

மைசூர் முதன் மந்திரி நிஜலிங்கப்பா அவர்களுக்கு ஞானோதயம் ஏற்பட்டுள்ளது. மொழிவாரி அடிப்படையில் ராஜ்யங்கள் பிரிக்கப்பட்டது பற்றி வருத்தம் தெரிவித்திருக்கிறார். இதை முன்பே உணர்ந்து கூறியவர்களின் கைகளைப் பலப்படுத்தியிருந்தால் இன்று இப்படி அங்கலாய்க்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்காதல்லவா? அரசியலில் குறுகிய நோக்கங்களும் பதவி ஆசைகளும் நீங்கி, மக்களின் நிரந்தர நலனைக் கருதும் பெரியோர்களின் கருத்துக்களுக்கு மதிப்புக் கொடுக்கும் கட்சி நாட்டில் பதவிக்கு வந்தால்தான் தேசம் உருப்படும்!



இ. நா. சபையில் ராஜாஜியின் ஆங்கிலத் துதிப் பாடலை ஸ்ரீமதி எம். எஸ்ஸும் ஸ்ரீமதி ராதா விசுவநாதனும் நின்றுகொண்டே பாடினர். இசைக்கேற்ப ஹராால்ட் ஸ்க்ராம் பியானோ வாசித்துப் பரிமளிக்கச் செய்தார்.

பாலில் தண்ணீரைக் கலக்கலாமா? தண்ணீரில் பாலைக் கலக்கலாமா? என்ற பிரச்னைகள் பருவங்களுக்குத் தக்கபடி நமது பால்காரர்களுக்கு எழும். சர்க்கார் இந்தப் பிரச்னைகளை எழக் கூடாது என்ற முறையில் முடிவு செய்து விட்டார்கள்.

சமீப காலங்களில் பாலில் தண்ணீர் கலந்து விற்றதற்காகப் பல ஏழைப் பால்காரர்கள் கடும் தண்டனைக்கு உள்ளானார்கள். அதன் விளைவாகச் சென்னைப் பால்காரர்கள் சங்கத்தார் பாலில் தண்ணீர் கலக்கச் சர்க்கார் அனுமதிக்க வேண்டும் என்று கோரியிருக்கிறார்கள். இதற்குக் காரணம் மாடுகளைப் பராமரிக்கும் செலவு அதிகமாக உள்ளது என்று கூறியிருக்கின்றனர்.

காரணம் நியாயமான காரணம். யாரும் ஒப்புக் கொள்ளக் கூடிய காரணம் என்றாலும் சர்க்கார் அனுமதி தர மறுத்து விட்டனர். அரசாங்கம் அரசாங்கமாக இருக்கும் பட்சத்தில் சர்க்கார் செய்த முடிவும் நியாயமானதே என்று ஒப்புக் கொள்ளலாம். ஆனால் இன்றைய அரசாங்கம் வியாபாரியாகி விட்டது. அரசாங்கம் வாரந்தோறும் விற்கும் அரிசியில், மண், கல் முதலிய பொருள்களைக் கலந்து விற்காமல் சுத்தமான பொருளாக விற்குமானால் சர்க்காரின் முடிவைப் பாராட்டலாம். அதுவே பெரும் குற்றவாளியான பிறகு பால்காரர்களைமட்டும் தடுப்பதில் பொருள் இல்லை.

அரசாங்கம் விற்கும் பாலும் சுத்தமான கறந்த பால் அல்ல. நல்ல பாலுக்கு முன் பணம் வாங்கிக் கொண்டு ''டோண்டு மில்க்'' என்று பவுடர் பாலைத்தான் தருகிறது. (விலை வித்தியாசத்தைப் பின்னால் திருப்பித் தருகிறது. ஆனால் எத்தனை பேர் இதை ஞாபகம் வைத்துக் கொண்டு அரசாங்கத்தை வாபஸ் தருமாறு கேட்கிறார்கள்?)

நவம்பர் எட்டாந் தேதி காலஞ்சென்ற ஸ்ரீமதி ராமேசுவரி நேரு குறித்து ராஜாஜி எழுதுகிறார்: அவர் இந்தியாவின் மாபெரும் தீரர்களில் ஒருவர். பிறர் மனத்தை அநுதாபத்துடன் புரிந்து கொண்ட ஒருவர். ஹரிஜன முன்னேற்றத்துக்காகவும், எல்லாச் சாதிகளிடையே ஐக்கியம் ஏற்படவும் அவர் பூரண ஈடுபாட்டுடன் உழைத்தார். மகத்தான நிர்மாணப் பொறுப்புக்களை நீண்ட காலம் சிறப்பாக நிறைவேற்றினார். தமது நல்லுரையாலும், சேவையாலும் சகாக்களும் நல்ல சேவா நெறியுடன் இருக்குமாறு செய்தார். விழிப்புடனும், விவேகத்துடனும், விசுவாசத்துடனும் அவர் புரிந்த பணி ஹரிஜன முன்னேற்ற இயக்கத்துக்கு ஒரு முக்கிய காரணமாகும். தக்கர் பாபாவைப் போல் அவர் தனித் தன்மை பொருந்திய ஒரு வியக்தி. காந்திஜியின் விசேஷ அன்பையும், மதிப்பையும் பெற்றவர். எனக்கு ஓர் அன்பான நண்பர் அவர். எனக்கு உதவவும், யோசனை சொல்லவும் எப்போதும் தயாராயிருந்தார்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

விசாகை உருக்காலை பற்றி மத்திய சர்க்கார் வெளியிட்டுள்ள கருத்து ஆந்திரக் கிளர்ச்சியாளருக்குத் திருப்தி தரவில்லை. ஸ்ரீ அமிருத ராவ் அவசரப்பட்டு உண்ணுவிரதத்தை முறித்துத் தங்களைக் கைவிட்டு விட்டார் என்பது அவர்களின் குற்றச்சாட்டு. வன்முறையானது உண்ணுவிரதம் முதலிய அஹிம்சா நடவடிக்கைகளை உள்ளடக்கப் பார்ப்பது விந்தை! வயது வந்தோரனைவரும் வாக்குரிமை பெற்ற ஜனநாயகத்தில் தம் இஷ்டப்படி கொள்கையோ, காரியமோ ஏற்பட வேண்டும் என்பதற்காகச் சிலர் உண்ணுவிரதமிருப்பது மிகவும் துயரகரமானது. தமது பிரசித்தி பெற்ற உண்ணுவிரதங்களை மற்றோர் பின்பற்றித் தவறுகப் பிரயோகிக்காமல் தடுக்க காந்தியடிகள் எவ்வளவோ முயன்றும், இன்றைக்குக்கூட உபவாச மிருந்து உயிர்விடுவதாக அச்சுறுத்துவது வன்முறையாளர்களுக்கு ஒரு கருவியாகி விடுவது விசனிக்கத் தக்கது.

ஃஃஃ

தேர்தலில் காங்கிரஸ் தோற்றால், எந்தத் தனியொரு பிற கட்சியும் அரசாட்சியை அமைக்க முடியாதென்றும், பல கட்சிகள் தளர்த்தியாகக் கூட்டுச் சேர்ந்து அமைக்கும் ஆட்சியால் நிலைமை மோசமாகுமென்றும் அறிவாளிகள் கூட எண்ணுகின்றனர்! காங்கிரஸ் பூச்சாண்டியின் சக்தி இது!

நமது அரசியல் சாசனத்தை நன்கு கவனித்தால் இந்தக் கருத்துக்கு ஆதாரமில்லை. நம் அரசியல் சாசனத்தில் எங்குமே அரசியல் கட்சிகள் குறித்துப் பிரஸ்தாபம் இல்லை. வாக்காளர்கள் வாக்குத் தந்தபடி அமையும் பார்லிமெண்ட் ஏற்பட்டு விட்டால் போதும்; பார்லிமெண்ட் அங்கத்தினர்களில் எவர் பெரும்பான்மையினரின் நம்பிக்கையைப் பெற்றிருக்கிறாரோ அவரை ராஷ்டிரபதி கண்டெடுத்து அவரிடம் மந்திரி சபை அமைக்கும் பொறுப்பை அளிப்பார். இதுவே சாஸன விதி.

ஃஃஃ

தில்லியில் நடந்த பசுவதை தடுப்புக் கிளர்ச்சியைக் காணுகையில் ஏதோ ஒரு தீய சக்தி ஏமாற்றப்பட்ட மக்களை வன்முறையில் செலுத்தி, அதன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள முற்படுவதாகவே தெரிகிறது. ஆரம்பத்தில் வன்முறை இல்லாவிடினும், விரைவிலேயே பலாத்காரம் தொடங்குகிறது. உடனே அதிகாரிகள் சட்டத்தைக் காக்கும் பொறுப்பை ஏற்கிறார்கள். அதிகாரிகளின் நடவடிக்கையால் இறந்தவர் தியாகமூர்த்திகளாவதுடன், அவரின் ஆதரவாளருக்கும் தியாகப் பிரபை உண்டாகிறது. பிறகு இந்தத் 'தியாக'த்தின் பலனைப் பெறுவதில் அரசியல் போட்டிகள் ஏற்படுகின்றன. இந்தத் துர்ப்பாக்கியமான நிலைமை அரசியல் சாஸனத்துக்கு விரோதமானது. ஏனெனில் சட்டசபை ஜனநாயகத்தையே அரசாட்சியின் ஆதார ஸ்தம்பமாக்குகிறது நம் சாஸனம். மக்கள் கூட்டங்கள் போடுவதும், எதிர்ப்பு ஊர்வலம் முதலியன நடத்துவதும் சிறுபான்மையோரின் தேவைகளை அனைவரும் அறியச் செய்வதற்கே பயன்பட வேண்டும்.

தற்போது சிலர் தங்கள் லாபத்துக்காகவே மக்களை மயக்கி வன்முறையைத் தூண்டியிருக்கிறார்கள் என்று நான் அஞ்சுகிறேன்.

ஒரு குழு அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட குழுக்கள் ஒழுங்கீனம் உண்டாக்கப் பலவிதத்தில் திட்டமிடுவதாகத் தோன்றுகிறது. உணவுப் பற்றுநிலை, விலைவாசி உயர்வு, இவற்றுக்காகக் கிளர்ச்சிகள் எழுந்ததோடு, அதன் பின்னும் தொடர்ந்து பரவலாக வன்முறைச் சம்பவங்கள் நிகழ்வதால் இந்த ஐயம் எழுகிறது. எளிய வாக்காளர்களை விலைக்கு வாங்க நினைப்பவர்களிடம் நான் சாஸனத்தின் மாண்பைச் சொல்வது, வனாந்தரத்தில் தனியாக அலறுவதற்குச் சமானம்தான். ஆனால் தேசபிதா வாழ்நாள் முழுவதும் கூறி வந்ததை அநுசரித்த அலறல் இது. தூண்டிவிடும் கோஷ்டித் தலைவர்கள் மட்டமான முறையில் மக்களைக் கவர முயல்வதை விடுத்து, அரசியல் சாஸனத்தை மதித்து நடக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஆண்டவன் நமக்களித்த முனிவர் — காந்தியின் நினைவை இத் தலைவர்கள் மதித்து நடக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஃஃஃ

பிரபஞ்சத்தின் மிக மிகச் சிறிய பொருட்களிலிருந்து மிக மிகப் பெரிய பொருட்கள் வரை அனைத்தையும் பற்றி ஸயன்ஸ் ஆராய்ச்சிகள் அறிவித்துள்ள உண்மைகளைப் பார்க்கும் போது மனித வர்க்கத்தின் நலனுக்காகவே பிரபஞ்சம் ஏற்பட்டது என்ற கொள்கையை ஏற்பதற்கில்லை — இது இன்றையத் தத்துவ ஆராய்ச்சியாளரின் கூற்று. இம்முடிவு காரணமாக உயர்ந்த மானுடப் பண்புகள் விரைவிலேயே தமது முக்கியத்துவத்தை இழக்கக் கூடும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஸயன்ஸ் காரணமாக மத நம்பிக்கை தளர்ந்த போதிலும், மனித குலத்தின் முன்னேற்றத்தில் உள்ள நம்பிக்கையேனும் தெய்வபக்திக் குறைவை ஓரளவுக்கு ஈடு செய்தது. மனிதனுக்குப் பிரபஞ்சத்தில்

முக்கியத்துவம் இல்லை என்ற புதுக் கொள்கையால் மானுடப் பண்பை மையமாகக் கருதும் நோக்கமும் கரைந்து போய்விடும். இந்தப் போக்கை விரைவுபடுத்துவது போலவே லோகாயதமான சுபிட்சத் திட்டங்கள் போடப்பட்டு இவற்றால் மக்களுக்கு இன்பம் விளைவதற்குப் பதில் கொடுங்கோல் ஆட்சியில் முடிந்திருக்கிறது. மனித குலம் எதிர்காலத்தில் வாழுமா என்றே அஞ்சும்படியாக ஸயன்ஸ் வளர்ந்திருக்கிறது. இதுவரையில் உலகம் நம்பி வந்த — உலகத்தை நல்ல முறையில் இயக்கி வந்த — தெய்வக்கொள்கைக்கு ஏதேனும் ஒரு மனப் புரட்சி மூலம் புத்துயிர் தந்தாலன்றி, அணு ஆயுத யுகத்தில் மனித குலத்துக்கு[விமோசனம் கிட்டாது.

மனித வர்க்கம் பிரபஞ்சத்தின் மையமாக இல்லாதிருக்கலாம். அதனால் மனிதப் பண்புகளின் சிறப்பைத் தாழ்வாக எண்ணிவிட வேண்டாம். அறுபது மைல் வேகத்தில் ஓடும் ரயிலில், நாம் நமது பெட்டியில் சுவஸ்தமாக அமர்ந்தும், நடந்தும் நமது தனி வேகத்தைக் காத்துக் கொள்கிறோம். உலகம் சூரியனைச் சுற்றி வருகையில் தினந்தோறும் நாம் நிமிஷத்துக்கு ஆயிரத்து இருநூறு மைல்கள் பிரயாணம் செய்கிறோம். இதனால் நமது நகரங்களிலும், சந்துகளிலும், வீட்டிலும் நாம் செய்கிற சஞ்சாரங்களின் முக்கியத்துவம் குறைந்துவிடுகிறதா என்ன? இதே போல் நம் முக்கியத்தை எப்போதும் உணர்ந்து பிரபஞ்ச விருட்சத்தின் நிறைவான பழம் மனித வர்க்கமே என்று எண்ணிச் செயலாற்றுவோமாக.

பௌதிகப் பிரபஞ்சத்தின் விஸ்தாரத்தினால் நம்மைச் சிறியவர்களாக எண்ண வேண்டியதில்லை. மனமும் ஆன்மாவும் பௌதிக அளவைகட்கு உட்படாதவை. இவற்றினால் உலகை இயக்கும் சக்தியுடன் மனிதன் இணைக்கப்பட்டிருக்கிறான். இவ்விணைப்புக்குத்தான் முனிவர்கள் தருமம் என்ற பெயரைத் தந்தனர். இதில் நம்பிக்கை வைத்து மனித குலத்தின் எதிர்காலத்தை உறுதிப்படுத்துவோம்.

# அமெரிக்காவின் மேலைக் கரையில்....

ஸான்பிரான்ஸிஸ்கோ ராஜ்யத்தைச் சேர்ந்த ஸ்டான்போர்டு நகரில் பாடிய பிறகு பெர்க்லி நகரில் நவம்பர் 4ந் தேதி யன்று ஸ்ரீமதி எம். எஸ்ஸின் ஒரு கச்சேரி நிகழ்ந்தது. இதன் பிறகு இசைக் குழுவினர் கான்ஸாஸ் நகருக்கு வந்து சேர்ந்தனர். கான்ஸாஸ் சர்வகலாசாலையில் உலோக சாஸ்திரத்தைப் போதிக்கும் பேராசிரியராக விளங்கும் ஸ்ரீ அனந்தநாராயணன் தமது குடும்பத்துடன் பதினைந்து வருஷங்களாக அமெரிக்காவில் இருந்து வருகிறார். இவர் ஸர் ஸி. வி. ராமனிடம் பங்களூரில் பணியாற்றிச் சிறப்புப் பெற்றவர். பின்னர் அமெரிக்காவில் உலோக சாஸ்திரத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். இது தவிர, கர்நாடக சங்கீதத்தில் அபாரமான பிரியம் உள்ள இவர், சுருதியைப் பற்றிய விஞ்ஞான ரீதியான விசேஷ ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு வருகிறார். ஒலி அலைகளை விஞ்ஞான ரீதியில் பதிவுசெய்து அவற்றின் தன்மைகளைக் கண்டறிந்து வருகிறார். சிறிது காலத்துக்கு முன்னால் இவர் அனுப்பி வைத்த கத்திரிக்காய் விதைகளைக் 'கல்கி' காரியாலயப் பூங்காவில் பயிராக்கியபோது ஒவ்வொரு அமெரிக்கக் கத்திரிக்காயும் கிட்டத்தட்ட ஒரு முலாம் பழத்தின் அளவுக்குப் பருப்பதைக் கண்டு பிரமித்தோம். அது மட்டுமா, அவற்றின் ருசி இன்னமும் நாக்கைச் சுற்றிக் கொண்டிருக்கிறதே !



மிஸ்ஸௌரி சர்வகலாசாலையின் ஆதரவில் கான்ஸாஸ் நகரில் நவம்பர் 6ந் தேதி நிகழ்ந்த ஒரு கச்சேரிக்குப் பிறகு கான்ஸாஸ் சர்வகலாசாலையின் ஆதரவில் லாரன்ஸ் நகரில் நவம்பர் 8ந் தேதி எம். எஸ்ஸின் ஒரு கச்சேரி நடைபெற்றது. இதன் பிறகு பிலடெல்பியாவில் பென்ஸில்வேனியா சர்வகலாசாலையின் ஆதரவில் ஸ்ரீமதி எம். எஸ். பாடினார். இந்தச் சர்வகலாசாலையில் பணியாற்றும் ஹரால்ட் பவர்ஸ் அவர்களுக்கு இந்திய சங்கீதத்தில் மிகுந்த ஞானம் உண்டு. மேனாட்டு ரஸிகர்களுக்கு நமது சங்கீதத்தின் நுணுக்கங்களை நன்கு விளக்கி வைக்கும் ஆற்றல் படைத்தவர்.

நவம்பர் 13ந் தேதி முதல் 19ந் தேதி வரை நியூயார்க்கிலும் வாஷிங்டனிலும் எம். எஸ். குழுவினர் பயணம் செய்கின்றனர். நவம்பர் 17ந் தேதி நியூயார்க்கில் ஒரு பொதுக் கச்சேரி உள்ளது. மேலும் ஓரிரு கச்சேரிகள் இருக்கலாம். டெலிவிஷனிலும் ஸ்ரீமதி எம். எஸ். தோன்றக்கூடும்.

இந்த அமெரிக்கச் சுற்றுப்பயணத்தின் போது ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்குக் கிடைக்கும் சம்மானத் தொகை முழுவதையும் அவர் பான் ஓரியன்ட் கலாச்சார நிறுவனத்துக்கு நன்கொடையாக அளிக்கவிருப்பது குறிப்பிடத் தக்கது.



# தீர்க்கப்பட்ட பிரச்சினை...

ஜாம்ஷெட்பூரின் முக்கியமான மின்சக்தி நிலையத்தில் 27,500 கிலோவாட் சக்தியுள்ள மூன்று டர்போ-ஆல்டர்னேட்டர்கள் உள்ளன. இரண்டு இயந்திரங்கள், டாடா இரும்பாலைக்கும், அதைச்சார்ந்த தொழிற்சாலைகட்கும், நகர முழுவதற்கும் தடையற்ற மின்சக்தியை வழங்குவதற்காக ஒரேசமயத்தில் இயங்குகின்றன.

1965-ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில இவைகளில் ஒரு இயந்திரம் திடீரென்று இயங்காமல் நின்றுவிட்டது. அதனுடைய மல்டிபின் காயில் முறையில் (மின் கம்பிச் சுருளின் அமைப்பில்) ஒரு பெரிய குறைபாடு கண்டுபிடிக்கப்பட்டது. அதை சரியாக்குவதற்கு யாதொரு வழியும் தெரியவில்லை. அதற்குத் தேவையான தனி மின் கம்பிச் சுருள்கள் கிடைக்கவில்லை. இறக்குமதி செய்யப்பட்ட மாற்றுப் பகுதிகளை பெறுவதற்கு அநேகமாக ஒரு வருடம் ஆகியிருக்கும். தவிர வழக்கமாக இதுபோன்ற பழுது வெளிநாட்டு தொழில் வல்லுநர்களால் தான் சரிபார்க்கப்பட்டு வருகிறது.

டாடா இரும்பாலை மின்சார தொழில் நிபுணர்கட்கு (எலக்ட்ரீஷியன்) அதிக வோல்டேஜ் உள்ள யந்திரங்களில் போதுமான அநுபவம் இல்லா விட்டாலும் இதை சரி செய்வதற்குத் தேவையான கருவிகளை கண்டுபிடிப்பதில் வெற்றியடைந்தார்கள். இந்த இயந்திரத்தை வழக்கமாக தேவைப்படும் மின் கம்பிச் சுருள்களின் எண்ணிக்கையில் பாதியைக்கொண்டே சரிசெய்ய ஒரு இணையற்ற முறையை கண்டு பிடித்தார்கள். இந்த டர்போ ஆல்டர்னேட்டர் 1966-ம் ஆண்டு மே மாதத்தில் பழையபடி சரிவர இயங்க ஆரம்பித்து விட்டது.

டாடா இரும்பாலையின் சாதனையானது நாட்டிற்கு 1.50 லட்சம் ரூபாய் பெருமான அன்னியச் செலாவணியை சேமிக்க உதவியது. மிக முக்கியமானது, இதுவரை இந்தியாவில் மேற்கொள்ளாத ஒரு சிக்கலான மின்சார சம்பந்தமான பழுதை சரிசெய்து மறுபடியும் ஜாம்ஷெட்பூர் 'நாங்கள் இதை செய்ய முடியும்' என்பதை எடுத்துக் காட்டியது.

**டாடா ஸ்டீல்**

The Tata Iron and Steel Company Limited

PVTTN 3479A

# அமெரிக்காவில் புயல்

(தமிழகத்தில் வீசிய புயலுக்கு முற்றிலும் மாறான ஓர் இசைப் புயல் அமெரிக்காவில் வீசி வருவதை நமது அமெரிக்க நேயர் ஜேம்ஸ் ஏ. ரூபின் அவர்களின் நிருபத்திலிருந்து அறிகிறோம்.)

ஜேம்ஸ் ரூபின் அக்டோபர் 30ந் தேதியிட்டு எழுதுகிறார் :

லாஸ் ஏன்ஜெல்ஸிலிருந்து இதை எழுதுகிறேன். உணர்ச்சி பரவசமான ஒரு வார காலம் — கடுமையான அலுவல்கள் நிறைந்த ஒரு வார காலத்துக்குப் பிறகு இதை எழுதுகிறேன். அக்டோபர் 23ந் தேதி ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடிய பிறகு சிகாகோவில் 25ந் தேதியும், ஸியாட்டிலில் 27ந் தேதியும், லாஸ் ஏன்ஜெல்ஸில் 29ந் தேதியும் கச்சேரிகள் செய்தார். இப்போது அமெரிக்காவின் மேற்குக் கடற்கரையில் மூன்று நாட்களுக்குச் சிறிது ஓய்வு எடுத்துக் கொள்கிறோம். இது எங்கள் அனைவருக்குமே மிகவும் வரவேற்கத் தகுந்ததாக உள்ளது. அடுத்த கச்சேரி நவம்பர் இரண்டாம் தேதி ஸான் ஃபிரான்ஸிஸ்கோவில் நடைபெறும்.

மேலே சொன்ன மூன்று கச்சேரிகளில் சிகாகோ கச்சேரி என் நினைவில் மிகவும் மனோகரமாகப் பதிந்துள்ளது. அக்கச்சேரியின்போது எங்கள் அனைவருக்கும் சென்னையிலேயே இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அறுநூறு பேர் கொண்ட ரசிகர் கூட்டத்தில் இந்தியர்கள் நிறைய இருந்தனர். கச்சேரியின் அற்புதமான கட்டங்களில் அவர்கள் ஆஹாகாரம் செய்ததும், ஆனந்தப் பெருமூச்சு விட்டதும், கரக்கம்பம் செய்ததும், அமெரிக்காவில் அசாதாரணமானதும், இந்தியாவில் மட்டுமே கிடைக்கக்கூடியதுமான ஒரு பிரதி உணர்ச்சியை இசைக் கலைஞர்களிடம் ஏற்படுத்தி விட்டது. ஆகா, அன்று எம். எஸ். அவர்கள் கலப்பற்ற தூய எழிலின் எத்துணை உயர்ந்த சிகரங்களில் சஞ்சரித்தார்! அவருடன் பக்கவாத்தியக்காரர்களும் அல்லவா அந்தச் சங்கீத மாய வித்தையின் கொடுமுடிகளுக்கு உயர்ந்து விட்டனர்! ரசிகர்களுக்கு அது ஒரு புதிய இன்பக் கிளர்ச்சி. அவர்களில் பலர், ''எம். எஸ்ஸின் சங்கீத சக்தி எங்களை அப்படியே தூக்கிக் கொண்டு போய் விட்டது'' என்று என்னிடம் சொன்னார்கள்.

மறு நாள் நாங்கள் சிகாகோவில் உள்ள வேதாந்த கேந்திரத்துக்குச் சென்றோம். அங்கு எங்களை ஸ்வாமிஜி அன்புடன் வரவேற்றார். வேதாந்த சங்கத்தின் வளர்ந்தோங்கி வரும் புதிய தலைமை ஸ்தாபனத்தில் ஒரு மணி ஆனந்தமாகக் கழித்தோம்.

ஸியாட்டிலிலும் லாஸ்ஏன்ஜெல்ஸிலும் எம். எஸ். தமது உண்மையான கலைத் தேர்ச்சியை மீண்டும் வெளிப்படுத்தினார். எம். எஸ்ஸின் கானத்தைக் கேட்க வேண்டுமென்றே நூறு மைல்களுக்கு அப்பாலுள்ள இடங்களிலிருந்துகூடப் பலர் லாஸ்ஏன்ஜெல்ஸுக்கு வந்திருந்தனர். அறுபது மைல்களுக்கு அப்பால் ஒரு கல்வி நிலையத்தில் டாக்டர் பட்டம் பெறப் படித்து வருகிறார் ஓர் இளைஞர். அவர் தம் மனைவியுடன் கச்சேரிக்கு வந்திருந்தார். ''மூன்று ஆண்டுகளுக்குமுன் நான் அமெரிக்காவுக்கு வந்ததிலிருந்து எம். எஸ்ஸின் கச்சேரியே என் வாழ்வின் மகத்தான தினம்'' என்று அவர் கூறினார்.

ஒவ்வோரிடத்திலும் ஒரே சீரான வெற்றி விஜயம்தான். ஒவ்வோரிடத்திலும் ஓர் அற்புதமான கதை உருவாகிறது. எவ்வளவு அற்புதமாயினும் ஒரே கதையைத் திரும்பத் திரும்பச் சொல்வதா என்றுகூட எனக்கிருக்கிறது. என்றாலும், இந்தக் கதை ஒரேபோல் அற்புதமாக ஆங்காங்கு நிகழுவதை எப்படிச் சொல்லாதிருக்க முடியும்? ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு ரசிகர் குழாமும் சங்கீதப் புயலில் அப்படியே அடித்துச் செல்லப்படுகிறார்கள்.

சங்கீத வெற்றிகள் தவிர எங்களுக்குக் காட்டப்படும் வரவேற்பைப் பற்றியும் மகிழ்ந்து எழுதுகிறேன். கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்தவர்களும், மற்றும் கலைஞர்களுக்கு இட — உணவு வசதி தந்தவர்களும் ஆங்காங்கு செய்த உபசாரங்களைப் பார்க்கும்போது என்னுடைய சகோதர மக்களான அமெரிக்கரைப் பற்றி நானே பெருமிதம் அடைகிறேன். மிகவும் கடுமையான-சக்தியை அப்படியே உறிஞ்சிவிடக்கூடிய- பயணத்தைச் சௌகரியமாக்கித் தர அவர்கள் தங்களால் இயன்ற சகலமும் செய்கிறார்கள். பல இடங்களில் எங்களுக்கு விருந்துபசாரம் செய்பவர்கள் தாமாகவோ, அல்லது தங்கள் நகரிலுள்ள இந்தியர்களின் துணை கொண்டோ, இந்திய உணவு வகைகளையே படைக்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். 'இந்த ஊரில் எப்படி இந்தியச் சமையல் வந்தது. இதென்ன மாந்த்ரீகமா?' என்றுகூடத் தோன்றுகிறது. சில இடங்களில் இந்தியர்களே எங்களுக்கு உணவு தயாரித்தளித்திருக்கின்றனர். உபசரணை தாங்க முடியாமல் போவதும் உண்டு. சிறிதேனும் எங்களுக்கு ஓய்வு தரச் சொல்லி மன்றாட வேண்டியதாகிறது. ஆயினும் ஒவ்வொருவருக்கும் எம். எஸ்ஸைப் பார்க்க வேண்டும், அவர் பாடிக் கேட்க வேண்டும் என்று தீராத ஆர்வமாக உள்ளது. இந்த இசைக் குழுவுடன் சிறிது நேரம் செலவிடக் கிடைப்பது தங்களுக்கு ஒரு கௌரவம் என்று அவர்கள் கருதுகிறார்கள். இவர்களின் அன்பு காரணமாக, நாங்கள் எவ்வளவு ஓய்வுகொள்ளத் திட்டமிடுகிறோமோ, அதைக் காரியத்தில் காட்டுவது அசாத்தியமாகவே உள்ளது.

லாஸ் ஏன்ஜெல்ஸிலுள்ள என் அத்தை எம். எஸ். கச்சேரியைக் கேட்டவுடன் என்ன சொன்னாளோ அதையேதான் இவர்கள் அத்தனை பேரும் எண்ணுகிறார்கள். அத்தை என்ன சொன்னாள் தெரியுமா? ''எம். எஸ்ஸை நாம் என்றென்றைக்கும் நம்முடனேயே இருத்திக் கொண்டு விட்டால் எப்படி இருக்கும்!'' என்றாள்.

# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

## டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

3 சைஸ்களில் கிடைக்கிறது



ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.



## செய்திப் படங்கள்

✽

வியட்நாம் பிரச்னையைப் பற்றி ஆராய மணிலாவில் கூடிய உச்சி மகாநாட்டில் ஏழு தேசங்களைச் சேர்ந்த தலைவர்கள் கலந்து கொண்டனர். வியட்நாம் பிரதமர், ஆஸ்திரேலியப் பிரதமர், கொரியா ஜனாதிபதி, பிலிப்பைன்ஸ் ஜனாதிபதி, நியூஸிலந்து பிரதமர், வியட்நாம் குடியரசுத் தலைவர், தாய்லாந்து பிரதமர், அமெரிக்க ஜனாதிபதி ஆகியோரைப் படத்தில் காணலாம்.





சென்னை முதன் மந்திரி திரு எம். பக்தவத்ஸலம் விஜயதசமி யன்று திரிசூலம் தேவாரப் பாடசாலையின் நான்காவது ஆண்டு விழாவில் உடையும், புத்தகங்களும் மாணவர்களுக் குப் பரிசாக வழங்கினர்.

✽

டபிள்யூ. எஸ். இன்ஸுலேட்டர் இந்தியா கம்பெனி யில் கட்டப்பட்டுள்ள விநாயகர் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் தொழில் மந்திரி திரு ஆர். வேங்கடராமன் தலைமையில் வெகு சிறப்பாக நடந்தேறியது.

'சென்னை ஊக்கம்' கப்பலைச் சென்னை மேயர் சென்னை நகரக் கப்பலாகச் சுவீகாரம் எடுத்துக் கொண்ட வைபவம். அருகே தொழில் அதிபர் நாராயணசுவாமியும், கப்பல் காப்டன் ராஜகோபாலும். இந்தத் தென்னிந்திய கப்பல் கார்ப்பொரேஷனைச் செவ்வனே நிர்வகித்து வருபவர் அதன் ஜெனரல் மானேஜர் தாஸ்தூர்.



## அத்தியாயம் 8

# கடம்பன் வந்தான்

வெண்ணிலவுப் பெண்ணரசி

கோதை

''மகளுக்கும் தந்தைக்கும் இடையே உள்ள பாசத்தை எப்படி அளவிட்டுக் கூறுவது? ஆனால் அந்த அளவு கடந்த பாசமே சில சமயங்களில் அளவு கடந்த சீற்றத்துக்கும் காரணமாகி விடுகிறதல்லவா? எத்தனைக்கு எத்தனை பாசம் இருக்கிறதோ, அத்தனைக்கு அத்தனை அந்தப் பாசமே கோபமாக மாறும் போது அதைத் தாங்க முடிகிறதில்லை அல்லவா? அப்படித்தான் ஆயிற்று என் பாட்டன் கிளாடியஸுக்கு அன்னை டயானாவிடம் ஏற்பட்ட மனப்பின்னல்'' என்றாள் நீலவல்லி.

நிலவின் ஒளியில் நீலவல்லியின் நெற்றியிலே நன்றாகத் துலங்கிய திலகத்தைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே திகைப்பு மேலிட்ட நிலையிலே சொல்லற்று நின்றான் வேலவன் கோதை.



''அன்பரே, இந்த நெற்றித் திலகத்தைப் பார்த்ததும் நீங்கள் எப்படித் திகைப்பு அடைந்தீர்களோ அப்படியே தான் நானும் திகைப்படைந்தேன், முதன் முதலாக இதைக் கூர்ந்து பார்த்தபோது! பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு என்று நினைக்கிறேன். நிலைமை புரிகிற வயது என் பார்களே, அப்படிப்பட்ட வயது எனக்கு அப்போது. ஒரு நாள் கடல் மீது சென்று திரும்பிய எங்கள் அரசர், தமது கொள்ளைப் பொருள்களோடு மதிப்பும் சிறப்பும் மிகுந்த ஒரு நிழற் கண்ணாடியை ஏதோ யவன மரக்கலம் ஒன்றிலிருந்து கொண்டு வந்திருந்தார். பெரிய நிலைக் கண்ணாடி அது. நானும் மணிமாலையும் அதை ஆவலோடு ஆராய்ந்து பார்த்தோம்.''

''மணி மாலையா?''

''ஆமாம். என்னுடைய முதிய தோழியாகிய மணிமாலை புன்னாட்டு அரச குடும்பத்தைச் சேர்ந்தவள். தோழி என்று கூறுவதை விடச் சிறு வயதிலிருந்து என்னை வளர்த்த என்னுடைய செவிலித் தாய் என்று அழைப்பதே தகும். கண்ணாடியைப் பார்த்துக் கொண்டே அவளிடம் கேட்டேன், இந்தத் திலகத்தைப் பற்றிய வரலாற்றை.

**அற்ப விஷயம்!**

அற்பம் என்று ஒதுக்கத்தக்கது எதுவுமில்லை, எதுவுமில்லை. — காலெரிட்ஜ்

அற்ப மனிதர்களுக்கு அற்ப விஷயங்கள் பெரிதானவை. — கோல்ட்ஸ்மித்

மிக மெல்லிய உரோமத்திற்கும் நிழலுண்டு. — கதே

— அ. பாண்டியராசன்

''எனக்கு அவள் புன்னாட்டின் அருமை பெருமைகளையும் அந்த அரச குலத்தின் வரலாற்றையும் எடுத்துச் சொன்னாள். சீற்றத்தினால் என் அன்னையைச் சாட்டை கொண்டு அடித்த அவள் தந்தை, அதன் பிறகு துயரத்தையெல்லாம் உள்ளத்துக் குள்ளேயே குழி தோண்டிப் புதைத்தார் என்றும், அந்த முதிய உடம்புக்கு அது காரணமாக மிக விரைவில் மரணமே நிகழ்ந்தது என்றும் அவள் சொல்லும் போது அவளுடைய குரல் நலிந்தது. தொண்டை அடைத்தது. நாங்கள் இருவருமே அழுது விட்டோம்.

''அன்பரே, எதிர்பாராதவாறு, 'யவன வேகம்' என்பார்களே அப்படிப் பட்ட ஒரு மாபெரும் சீற்றம் ஏற்பட்டு அதன் விளைவாகத் தன் மகளை அப்படிக் கடிந்து கொண்டாரே, கிளாடியஸ், அவர் அதோடு நிறுத்தாமல், குறுக்கே பாய்ந்த இளவரசரிடம் — என் தந்தை யிடம் — சில மொழிகள் பேசி வாதாடி யிருந்தால் ஒரு வேளை நிலைமை வேறு விதமாகத் திரும்பி யிருக்கும். அல்லது சீற்றம் தணிந்த பிறகாவது மகளிடம் சென்று அவர் ஏனென்று இரண்டு சொல் கேட்டிருக்கலாம்! இல்லை, என் அன்னையாவது தந்தையிடம் வந்து, நிலைமையை விளக்க முயன்றிருக்கலாம். அப்படி ஏதும் நடக்கவில்லை. கிரேக்கர் களுக்கே தன்மானம் அதிகம் என் பார்கள். உள்ளத்தின் உணர்ச்சிகளிலே ஒரு பெருமிதம் உண்டாம் அவர்களுக்கு! அது அவர்களுடைய ரத்தத்திலே தோய்ந்தது. சீற்றமோ, அன்போ, வெட்கமோ, ஆத்திரமோ எது ஏற் பட்டாலும் அது பெரிதாக இருக்கும் அவர்களுக்கு. ஒரு பெருமிதம் நிரம்பிய தாக இருக்கும். அப்படித்தான் நினைக் கிறேன், இந்தத் துயர நிகழ்ச்சியைப் பற்றி இப்போது! எப்படி யிருந்தாலும் சரி, நான் இத்தனை துயரங்களும் பட வேண்டியிருக்கும்போது அதைப் பற்றி நினைத்து வருந்துவதில் என்ன பயன்?''

இவ்வாறு சொல்லிக் கண் கலங்கி நின்றாள் நீலவல்லி. பிறகு இருவரும் தளர்ந்த நடையிலே அந்தப் பௌத்தப் பள்ளியிலிருந்து அப்பால் நடக்க ஆரம் பித்தார்கள்.

''வல்லி! புன்னாட்டு அரண்மனையில் வளர்ந்து வந்த அரச குமாரி நீ! இங்கே வந்து எப்படி இந்தத் தீவில் சிக்கிக் கொண்டாய்? நினைத்துப் பார்க்கவே அதிர்ச்சி உண்டாகிறதே!'' என்று, சோகக் குரலிலே கேட்டான் வேலவன் கோதை.

''அன்பரே, தந்தை எப்படி ஒரே மனமாற்றத்தில் அலெக்சாந்திரியாவுக் குப் போனாரோ, அதே போன்ற ஒரு மனமாற்றத்தில் உள்ளத்தைக் கல்லாக் கிக்கொண்டு சில மாதங்கள் கழித்தாள் என் அன்னையும். அன்பு கோபமாக மாறும்போது சில நாள் இப்படி இருப் பது இயல்புதான் என்றும், தங்கள் விருப்பத்துக்கு மாறாகக் குழந்தைகள் திருமணம் செய்து கொண்டால் பெற் றோர்களும் பிள்ளைகளும் சில நாட்கள் இப்படிப் பேச்சு மூச்சின்றி இருப் பார்கள்; பிறகு எல்லாம் சரியாகப் போய்விடும் என்றும் வாழ்க்கை அனு பவம் நிறைந்த மணி மாலை எனக்குச் சொன்னாள். அப்படியே ஆயிற்று என் அன்னையின் வாழ்வும்.''

''ஓ! அப்படியானால் மீண்டும் அந்த உறவு ஒட்டிக் கொண்டதோ?'' என்று கேட்டான் வேலவன்!

''ஒட்டிக் கொண்டது. ஆனால் விதி அங்கேயும் குறுக்கிட்டது. என் பாட்ட னார்தான் தமிழ் நாட்டிலிருந்து சென்ற சில நாட்களில் இந்த உலகை விட்டுப் பிரிந்தாரே! அதனால் தந்தையும் மக ளும் இதன் பிறகு சந்திக்க முடியாமல் போய்விட்டது. ஆனால் அலெக்சாந்திரி யாவிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்து போன யவன வணிகர்கள் அன்னை யைச் சந்தித்து அடிக்கடி அவளிடம் செய்திகள் சொல்லிச் சென்றார்கள். ஒரு நாள் அவர்களிட மிருந்து என் அன்னை அந்தத் துயரச் செய்தியையும் கேள்விப்பட்டாள். அலெக்சாந்திரியாப் பட்டணத்தில் வெண்ணிலவுக் கோயி லின் அருகிலே உள்ள ஏரிக் கரையிலே தந்தையின் உடம்பை அடக்கம் செய் தார்கள் என்று கேட்டதும், என் அன்னை டயானா அதிர்ந்து போனாள்! நீறு பூத்த நெருப்பாக இதுவரை அடங்கி நின்ற சோகம் எல்லாம் சாம்பல் மூடிய தீக் கங்கைக் கிளறி யதும் அனல் கனிந்து தீப்பிடிப்பது போல அப்படியே உள்ளத்திலே பற்றி எரியத் தொடங்கிற்று! எத்தனையோ இரவுகளில் நிலா முற்றத்துக்கு வந்து தன்னந் தனியாகக் கண்ணீர் வடித் தாள் என் அன்னை. ஒருவருக்கொருவர் உள்ளத்தின் கோப தாபங்களைச் சொல் லித் தீர்த்துக் கொள்வதற்கு ஒரு வாய்ப்

# ால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

·னெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், ொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ழித்துவிடுகிறது.

ால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர் ாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட் கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறை ால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப் டுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித் துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

ால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, ழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




DC. G. 35 TAM




ஜிகத்தத்திற்கும், வாயில் நறுமணம்கமழவும், வெண்மையான ற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்

..உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.




# அமிர்தாஞ்சன்

லிமிடெடின்

# கிரைப் மிக்சர்

தயாரிப்பவர்கள் :

அமிர்தாஞ்சன் லிமிடெட் சென்னை - 4.

FDS. AGM. 472 TMA

இல்லாதபடி மரணத்தின் கோரக் கரங்கள் தன் அருமைத் தந்தையைக் கல்லறைக்குள்ளே அடக்கம் செய்து விட்டனவே என்று ஆற்றுமைப் பட்டாள் மகள் டயானு! அந்தக் கல்லறையையாவது ஒரு முறை சென்று பார்த்துத் தன் கண்ணீரை யெல்லாம் அதிலே கொண்டு கொட்டி அந்த நிலத்தை மெழுக வேண்டும் என்று ஒரு தாபம்! ஆனல் அதற்கும் இடம் இல்லாதபடி அவளுக்கும் அலெக்சாந்திரியாவுக்கும் நடுவே எத்தனை பெரிய கடல் கொந்தளித்துக் கொண்டிருக்கிறது என்று ஒரு ஏக்கம்! இப்படிக் கழிந்தது சில காலம்.

''என் தந்தையிடம் இதைப் பற்றி எப்படிப் பேசுவது, என்ன பேசுவது என்று புரியாமல் மௌனமாகத் தனது துயரத்தை யெல்லாம் பொதிந்து பொதிந்து கண்ணீராகக் கொட்டினுள் அன்னை.

''என் தந்தையோ? அவருடைய உள்ளத்திலும் ஒரு பெரிய ஆற்றுமை! ஒரு பெரிய துயரம். ஒத்த உணர்ச்சியோடு, ஒத்த இயல்புகளோடு மனம் ஒத்துப் பழகிய அந்த மதிப்பு மிக்க யவன வணிகரிடம் தான் கொண்ட நட்பு இப்படி முடிந்ததே என்று என் தந்தை புனல் வேணிய மன்னரும் தன்னந் தனிமையிலே சொலவற்றுத் துயருற்ருர். அவருக்கும் என் அன்னையிடம் இதைப் பற்றிப் பேச முடியாத படி ஒரு துயரத் தயக்கம். வியப்பு என்னவென்றல் என் தாய் தந்தையர் இருவருமே ஒருவருக் கொருவர் இந்தத் துயரத்தையும் வேதனையையும் வெளியில் காட்டிக் கொள்ள முடியாமல் தங்கள் உள்ளங்களின் பரிவையும் அன்பையும் கொண்டு இந்த மனப் போராட்டங்களைப் போர்த்தி மூடினர்கள்! இது காரணமாக ஒருவரிடம் மற்றவர் சற்று அதிகமாகவே தங்கள் இதய அன்பைப் பொழிந்தார்கள்!

''இச் சூழ்நிலையிலே நான் பிறந்தேன். அப்போது ஏதேதோ தந்தை கிளாடியஸை எண்ணிப் பலப் பல நேர்த்திக் கடன்களும், பிரார்த்தனைகளும் செய்து கொண்டாள் டயானு அம்மை.

''அன்பரே, இந்தப் புண்ணியத் தமிழ் நாட்டில் குழந்தைகளுக்கு முடி இறக்குவது என்று எப்படி ஒரு வழக்கம் இருந்து வருகிறதோ, இதே போல எகிப்திலும் கிரேக்க நாடுகளிலும் உள்ள வெண்ணிலவுத் தேவதைகளின் கோவில்களிலே முடி இறக்கும் ஒரு பழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது. இந்த வழிபாட்டு முறையை ஒரு முக்கிய



புன்னுட்டு அரச குடும்பத்தைச் சேர்ந்தவள் மணிமாலை. நீலவல்லியின் செவிலித் தாயாக விளங்கிய மணிமாலையையும் சிறுமி நீலவல்லியையும் கடம்பன் மரக்கலத்தில் சந்திக்கும் காட்சியையே இவ்விதழ் அட்டைப்படமாக அளிக்கிருர் ஓவியர் வினு.

காரணமாகச் சொல்லி என் தந்தையிடம் ஒப்புதல் பெற்று அலெக்சாந்திரியா செல்ல வேண்டும் என்று நினைத்தாள் டயானு. அப்படிச் செல்லும் போது என் பாட்டனுரின் கல்லறையில் தான் பெற்றெடுத்த குழந்தையைக் கொண்டு காண்பித்து, வணக்கம் செலுத்தி, அமைதியற்ற நிலையிலே இந்த உலகைப் பிரிந்து சென்றுவிட்ட அந்த நல்லுயிரிடத்தில் மன்னிப்புக் கோர வேண்டும் என்று விரும்பினுள் அவள்!

''விருப்பத்தைச் சொல்லிலே நிறைவேற்றச் சில மாதங்கள் ஆகின. பிறகு சொல்லைச் செயலிலே நிறைவேற்றச் சில மாதங்கள். கடைசியில், என் தந்தையிடம் இதற்கு ஒப்புதல் வாங்குவதில் பெருந்துணையாக இருந்தாள் மணிமாலை.

'''டயானு, நான் இந்தப் புன்னுட்டிலிருந்து உன்னேடு வருவது என்பது முடியாத செயல். அது உனக்கே தெரியும். எனவே நீ செல்லும் மரக்கலத்தில் உனக்கும் குழந்தைக்கும் துணையாக மணிமாலையை அனுப்புகிறேன். உங்களோடு நம்பிக்கை மிக்க நமது அரசப் பணியாளர்கள் சிலரும் வருவார்கள். வழிபாட்டை முடித்துக் கொண்டு நன்னலத்தோடு திரும்பி வா. எனக்கு அதில் மறுதலை இல்லை. ஒரு வகையில் எனக்குமே அது மன அமைதியைத் தரும்!' என்ருர் அரசர்.

''இதன்படி என் அன்னை அலெக்சாந்திரியாவுக்குப் புறப்பட்டாள். அவள் புறப்படுவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே ஒரு யவன வணிகரிடம் என் மாமன் இளம் கிளாடியஸுக்குச் செய்தி அனுப்பினர் தந்தை.

''அன்பரே, அப்போது எனக்கு மூன்று அல்லது நான்கு வயது இருக்கும் என்று நினைக்கிறேன். என் தாயும் நானும் மணிமாலையும் சில அரசப் பணியாளர்களும் மூசிறியிலிருந்து புறப்பட்ட மரக்கலத்திலே அலெக்சாந்திரியாவுக்குச் சென்றோம்.

''என் தாய் மாமன் இளம் கிளாடியஸின் முகம் எனக்குச் சரியாக இப்போது நினைவில்லை. அந்தக் கனவுப் பட்டினமாகிய அலெக்சாந்திரியா நகரமும் ஒரு கனவு போலத்தான் இப்போது மங்கிய நினைவாக இருக்கிறது. ஆனால் நாங்கள் பார்த்த வெண்ணிலவுக் கோயிலும் அதைச் சுற்றி நின்ற சூழ்நிலைக் காட்சிகளும் ஏனோ என் மனத்தில் மிக நன்றாகப் பதிந்து விட்டன! கோவில் சிறிய கோவில்தான். கோவிலுக்குள்ளே நின்ற நிலவம்மன் தோற்றம் இப்போதும் என் கண்முன் அப்படியே நிற்கிறது. கிரேக்க நாட்டு வேட்டுவப் பெண்ணின் அங்கியும் உடையும்! தோளிலே செருகிய அம்பறாத் தூணி! கையிலே வில். அருகில் வேட்டை நாய். இந்தத் தோற்றத்தில் நின்றாள் அந்தக் கன்னி அம்மன்! அது ஆடி மாதம் என்று மணிமாலை சொல்லக் கேள்வி. அந்த ஆடி மாதத்தின் முழு நிலா இரவிலேதான் யவன நாட்டு மரபுப்படி அந்த அம்மனுக்கு வழிபாடு நடந்தது. இப்போதும் எனக்கு அந்தக் காட்சி மட்டும் நன்றாக நினைவிருக்கிறது. நூற்றுக் கணக்கான யவனப் பெண்கள் கையில் விளக்குகள் ஏந்தி வந்து நிலவுத் தாய்க்கு வணக்கம் செலுத்தினார்கள். குழந்தை பெற்றவர்கள் காணிக்கை செலுத்தி முடி இறக்கினார்கள். குழந்தை உண்டானவர்கள் நேர்த்திக் கடன்களைச் செய்து கொண்டார்கள். திருமணமாக வேண்டிய கன்னிப் பெண்களோ என்றால், தக்க கணவர்கள் தங்களுக்கு வர வேண்டும் என்று அம்மனிடம் வேண்டுதல் செய்து கொண்டார்கள். அந்தக் காட்சி இப்போதும் என் கண் முன் நிற்கிறது. ஒரே பெண்கள் கூட்டம். நூறு நூறு விளக்குகள், நூறு நூறு யவனக் குழந்தைகள் — இத்தனை பேருக்கும் புன்னகை தவழும் முகத்தோடு எங்கள் வெண்ணிலவுக் கன்னியம்மன் வரம் கொடுத்தாள், அந்த ஆடி மாதத்து முழு நிலா இரவிலே!

''கோவில் வழிபாட்டை முடித்துக் கொண்டு அன்றிரவு நடுநிசியிலே நிலவின் மோன மயமான ஒளியில் ஏரிக் கரைக்கு வந்து நின்றாள் என் அன்னை. அங்கே எழுந்து நின்ற தந்தையின் கல்லறையைக் கண்டாள். அவ்வளவு தான். அன்பரே, இதன் பிறகு என்ன நடந்தது என்பதை மணிமாலை எனக்குச் சொல்லும்போது அப்படியே அவள் அலறித் துடித்து விட்டாள்.

''என் அன்னை அந்தக் கல்லறையின் மேடை முகப்பிலே கொண்டு என்னைக் கீழே இறக்கி வைத்தாளோ, இல்லையோ, அவளுக்குக் 'கிர்' என்று தலை சுற்றியது. ஏரியும், தண்ணீரும், நிலமும் வானமும் எல்லாம் 'கிறுகிறு' என்று சுழன்றன. மணி மாலையின் தோள்களைப் பிடித்துக் கொண்டே மேலே ஒரு அடி எடுத்து வைத்தாள். நடை தள்ளாடியது. ''அப்பா'' என்று அழைத்தாள். அடுத்த விநாடி ''அப்பா'' என்றாள், மறுபடியும்! பிறகு ''அப்பா'', ''அப்பா'' என்று கதறினாள். கதறிக் கொண்டே அப்படியே தடாலென்று கல்லறையின் மீது விழுந்தாள். புரண்டாள். அவ்வளவுதான்; மூச்சுத் திணறி மயக்கம் போட்டு மரக் கட்டையாகக் கிடந்தாள் அவள்!

''என் அன்னைக்கு மீண்டும் நினைவு வரும்படி செய்வதற்கு மணிமாலையும் என் மாமனும் மற்றவர்களும் ஏதேதோ முயற்சிகள் எடுத்து மூர்ச்சை தெளிய வைத்தார்கள். ஆனாலும் நரம்பில் ஏற்பட்ட அதிர்ச்சி நீங்கவில்லை. பெற்ற தந்தையின் கல்லறையிலே அதிர்ச்சியுற்று விழ்ந்தவள் மறுபடி வீட்டுக்கு வந்ததும் படுக்கையில் படுத்தாள். அடுத்த படுக்கை என் பாட்டனுடைய கல்லறைக்கு அருகிலேயே இன்னொரு கல்லறையின் அடியிலேதான். யாராலும் அவளைக் காப்பாற்ற முடியவில்லை. இறுதி மூச்சு இழையும்போது தன் உடன் பிறப்பான இளம் கிளாடியஸை அருகிலே அழைத்து ஒரு முக்கியமான வேண்டுகோள் செய்தாள் என்னுடைய அருமைத் தாய்.

' ''குழந்தையும் நானுமாக வந்தோம். இனிமேல் இந்தக் குழந்தை மட்டுமாவது தந்தையிடம் திரும்பிச் சேர வேண்டும். மகளைப் பிரிவது என்றால் ஒரு தந்தைக்கு அதன் விளைவு என்ன என்பது எனக்குத் தெரியும். என் வாழ்வில் நான் அதைப் புரிந்து கொண்டு விட்டேன். ஆதலால் என் குழந்தையை நான் அவளுடைய தந்தையிடமிருந்து பிரிக்க மாட்டேன். மணிமாலையின் துணையோடு என் மகளை அவளுடைய தந்தையிடம் சேர்க்க வேண்டியது உங்கள் பொறுப்பு! உங்கள் கடமை அது!'

''இவ்வாறு உறுதி வாங்கிக் கொண்டு உயிர் நீத்தாள் என் தாய்.

டோக்கன் இல்லை...





காத்துக்கிடக்கும் அலுப்பும் இல்லை...



உங்கள் செக்குகள் உடனடியாக
ரொக்கமாக்கித் தரப்படும்:




அதனை ஈடேற்றுவது எமது நவீனமயமான

# டெல்லர் திட்டம்

## பஞ்சாப் நேஷனல் பாங்க்

உற்பத்திவளம்: தன்னாற்றலை நம்பிவாழ ஒரே வழி.

PR-PNB-6625 TA /2

''அவளுடைய அந்தக் கடைசி விருப்பத்தை நிறைவேற்றுவதில் கால தாமதம் செய்யவில்லை என் தாய் மாமன். ஏனென்றால் அந்தக் காலத்தில் அவருக்கு மிகவும் நெருங்கிய நண்பன் மீகாமன் என்ற மரக்கலத் தலைவன்.''

''எந்த மீகாமன்?'' என்று வியப்போடு கேட்டான் வேலவன் கோதை.

''ஆமாம். இதே மீகாமன்தான். அவனுடைய மரக்கலத்தில் நானும் மணிமாலையும் எங்களோடு வந்த பணியாளரும் ஒப்படைக்கப்பட்டோம். தமிழ் நாட்டுக்கு வந்து கொண்டிருந்த யவன வணிகர்கள் சிலரும் அந்த மரக்கலத்தில் எங்களோடு இருந்தார்கள்.

''இந்த மாபெரும் மரக்கலம் பருவக் காற்றை யொட்டி அலெக்சாந்திரியாவிலிருந்து புறப்பட்டது. அப்போது தாய் மாமன் உணர்ச்சி மேலிட்டவராக ஏதேதோ விளையாட்டுப் பொருள்களும், யவன அங்காடிகளிலே விற்கும் விசைப் பாவைகளும், கண்ணாடிப் பாத்திரங்களும், சிறிய சிறிய யவன விளக்குகளும், அழகழகான யவன இருக்கைகளும் எனக்காக மணிமாலையிடம் ஒப்படைத்து அனுப்பினார். என்னிடம் அவருக்கு அத்தனை அன்பு! என்ன செய்வது! எல்லாம் எதிர்பாராத விதமாக முடிந்தது'' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டு அயர்ந்தாள் நீலவல்லி.

''வல்லி, நீ என்ன சொல்லுகிறாய்? மணிமாலையும் நீயும் ஏறி வந்த அந்த மரக்கலமும் புயலுக்கு உள்ளாகி விட்டதா?'' என்று படபடப்போடு கேட்டான் வேலவன் கோதை.

''இல்லை, இல்லை. உங்களைப் போல் கடலிலே நீந்திக் கரையேறத் தெரிந்த வீரர்கள் இல்லையே நாங்கள்! அதனால் புயல் எங்களிடம் கருணை காட்டிற்று. கடல் எங்களிடம் அன்போடு நடந்து கொண்டது. பருவக் காற்று எங்களுக்குத் துணை செய்தது. ஆனால் இத்தனைக்கும் மேலான ஒரு கேடு மனித உருவிலே வந்து எங்களைத் தாக்கியது. புயலுக்கும் காற்றுக்கும் கடலுக்கும் கருணை உண்டே! சில மனிதர்களுடைய நெஞ்சத்தில் தானே அது இருப்பதில்லை!''

நடந்து சென்று கொண்டிருந்த நீலவல்லி ஒரு பெரிய ஆலமரத்தின் அடியிலே நின்றாள். பிறகு சொன்னாள்:

''அன்பரே, அலெக்சாந்திரியாவிலிருந்து புறப்பட்ட எங்கள் மரக்கலம் முப்பது முப்பத்தைந்து நாட்கள் பயணம் செய்து மேற்குக் கடற் கரையை அணுகிக் கொண்டிருந்தபோது எங்களோடு இருந்த யவன வணிகர்கள் எல்லாம் உடம்பு முழுதும் பதறத் தொடங்கினார்கள். அது முழு நிலா இரவு. அப்போது வெள்ளைத் தீவுக்கு அருகிலே வந்து கொண்டிருந்தது எங்களுடைய மரக்கலம்.

''வேகமாகச் சென்று கொண்டிருந்த எங்கள் மரக்கலத்திலே திடீரென்று

★○★○★○★○★○★○★○★

சமீபத்தில் ஹாம்பர்க் நகரின் தெருக்களில் ஒரு புலி உலாவிய போது, ஒரே பரபரப்பு. எதிரே வந்த மக்கள் மறைவிடம் தேடிப் பதுங்கிக்கொண்டு எட்டிப் பார்த்தனர்! என்ன ஆச்சரியம்! அந்தப் புலியின் மீது ஒரு பெண் அமர்ந்து கொண்டிருந்தாள்!

ஸ்பானிய சர்க்கஸ் கம்பெனி, ஹாம்பர்க் நகரில் முகாமிட்டிருந்தது. சர்க்கஸில் வித்தைகள் புரியும் 'பெங்கால்' என்னும் இந்தியப் புலியை உடற்பயிற்சிக்காகத் தெருக்களில் பயிற்சியாளர் வில்லியம்ஸ் அழைத்து வந்தார்! வில்லியம்ஸின் அழகிய மனைவி ஜீனட், புலியின் மீது அமர்ந்து சவாரி செய்தாள்! ''பூனை'' போலச் சாதுவாகத் திரிந்த புலியையும், அதன் மீது ''பெண்புலி'' போல அமர்ந்திருந்த மங்கையையும் கண்ட மக்கள், ''எதற்கும் ஒதுங்கி இருப்பது நல்லது'' என்று தூரத்திலிருந்து கொண்டேதான் வேடிக்கை பார்த்தார்கள்! அடுத்த நாள் சர்க்கஸில் கூட்டம் நிரம்பி வழிந்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? (யூ.பி.எஸ்.)

★○★○★○★○★○★○★○★



ஒரு பேரோசை கேட்டது. ஏதோ மரம் ஒடிந்து விழுந்தால், வேரோடு சாய்ந்தால், எப்படிச் ''சடசட'' என்று ஒரு பெரிய ஓசை திடீரென்று கேட்குமோ அப்படிப்பட்ட ஓசை அது! அதைத் தொடர்ந்து மரக்கலம் அங்கு மிங்கும் நிலையின்றித் தள்ளாடியது. 'மடமட' 'தடதட' என்று மரப் பலகைகளிலே மனிதர்களுடைய காலடி ஓசை கேட்டது. நாங்கள் அனைவரும் நடுங்கினோம். சிலர் கூச்சல் போட்டனர். சிலர் நிலைகொள்ளாமல் ஓடினர்.

'''மீகாமன் எங்கே?' என்று ஒரு பேயலறல் கேட்டது. அடுத்த விநாடி அங்கே நூறு கொள்ளை வீரர்கள் தோன்றினார்கள். வான மண்டலக் கடம்பன் உள்ளே நுழைவது தெரிந்து யவன வணிகர்கள் எல்லாம் குரல் அடைத்துச் சரிந்தார்கள்.

''ஈட்டிகளும் வாள்களும் குந்தங்களுமாக உள்ளே வந்த வீரர்கள் மீகாமனை வளைத்துக் கொண்டு நின்றார்கள்.

'''என்னைப் படைத்த கடவுளே! எம்பெருமானே!' என்று சொல்லிக் கொண்டே அப்படியே உடம்பு முழுதும் கீழே படியும்படி வானமண்டலக் கடம்பனுக்கு வணங்கினான் மீகாமன்.

'''இந்தக் கலங்கள் நிறைய யவன மது வகைகள், இவற்றைச் சுற்றி இந்தப் பரப்பு முழுதும் வைத்துள்ள பரிசுப் பொருள்கள் எல்லாம் வெள்ளைத் தீவு மன்னனுக்கு உரிய காணிக்கைப் பொருள்கள்!' என்றான் மீகாமன்.

''வான மண்டலக் கடம்பனுடைய முகத்திலே புன்னகை அரும்பிற்று. அவனுடைய பார்வை மரக்கலத்திலே யவன வணிகர்கள் அனைவரையும் சுற்றி வளைத்தது.

''வெள்ளைத் தீவின் வீரர்கள் அந்த மரக் கலத்திலேயிருந்த பொருள்கள் எல்லாவற்றையும் அப்படி அப்படியே 'கொள் முதல்' செய்ய முனைந்தார்கள். வணிகர்களுடைய உடம்பும் உள்ளமும் பதறி, யாரும் எதுவும் செய்யவோ, சொல்லவோ முடியாத நிலையில் பனிக்கட்டிகளாக உறைந்து போய் நின்றார்கள்!

''அத்தனை வணிகர்களையும் இடமிருந்து வலம், வலமிருந்து இடம், ஒரு பார்வை இப்படியும் அப்படியும் பார்த்தான் கடம்பன்! அப்போது அந்தக் கூட்டத்தில் மணிமாலை நிற்பதையும், அவள் உடம்பிலே ஒரு பச்சைச் சிறுமி கொடி போலப் பின்னிக் கொண்டு துவளுவதையும் கடம்பன் கண்டான்.''

இவ்வாறு கூறிவிட்டு வேலவன் கோதையை ஏறிட்டு நோக்கினாள் நீலவல்லி.

(தொடரும்)

## தியாகத்தின் விலை என்ன?

வள்ளல் ஒருவர் இல்லத்தில் ஒரு சாவு நேர்ந்து விட்டது. அந்தச் சமயம் பார்த்து ஒரு புலவர் வந்து சேர்ந்தார். இத்துயர நிகழ்ச்சி பற்றிப் புலவர் அறிந்தால் அவர் மனம் நோகும்; தாம் வந்த காரணத்தைக் கூறுதல் அசந்தர்ப்பம் என்று எண்ணித் திரும்பி விடுவார். இதனை உணர்ந்த வள்ளல் மரணம் நிகழ்ந்ததை மறைத்துப் புலவரை வரவேற்றுப் பரிசுகள் வழங்கி அனுப்பி வைத்தார். பின்னரே ஈமச் சடங்குகள் பற்றி நினைக்கலுற்றார்!

''இப்படி இலக்கியத்தில்தான் ஒரு நிகழ்ச்சி நடைபெறக் கூடும் என்று எண்ணி வந்தேன். ஆனால் வாழ்க்கையிலும் உண்மையாகவே காண்கிறோம்!'' என்று கூறி அதிசயித்தார், கு. அழகிரிசாமி. அவர் வியந்தது திரு வள்ளியப்பா கூறிய ஒரு சம்பவத்தைக் குறித்து.

திருவல்லிக்கேணி பாரதி இளைஞர் சங்கத்தின் ஆதரவில் காலஞ் சென்ற தேசபக்தர் ஆக்கூர் திரு அனந்தாச்சாரியார் அவர்களின் மறைவு குறித்து நிகழ்ந்த இரங்கல் கூட்டத்துக்கு, தலைமை வகித்தார் கு. அழகிரிசாமி. வள்ளியப்பாவும் வேறு பலரும் பேசிய இந்தச் சிறிய ஆனால் சிறந்த கூட்டத்தில் ஐம்பது ஆசிரமம் நடத்திய ஆக்கூராரின் தன்னலமற்ற சேவை, தியாகத்துக்கு விலை போகாத உள்ளம் ஆகியவையெல்லாம் பாராட்டப் பெற்றன.

தியாகராயநகர் வாணி மகாலைக் குழந்தை எழுத்தாளர் சங்கக் கூட்டம் ஒன்றுக்காக இலவசமாக ஒரு நாள் பயன்படுத்திக் கொள்ள அனுமதி பெற்றுத் தர வேண்டும் என்று ஆக்கூராரைக் கேட்டுக் கொண்டார் வள்ளியப்பா.

''அதற்கென்ன, காலையில் வாருங்கள். அது சம்பந்தமாக உரியவர்களைப் போய்ப் பார்த்துப் பேசி விட்டு வருவோம்'' என்றார் ஆக்கூரார். காலையில் குறித்த நேரத்துக்குச் சற்றுத் தாமதமாகவே போய்ச் சேர்ந்தார் வள்ளியப்பா. வாசலிலேயே நின்றிருந்த ஆக்கூர் அதே காரில் தாமும் ஏறிக் கொண்டு ''போகலாம்'' என்றார். காரியம் நல்லபடியாக முடிந்து மீண்டும் அவருடைய வீட்டுக்குத் திரும்பும் போது தான் வாசலில் கூட்டம் நிற்பதைக் கவனித்தார் வள்ளியப்பா. ''என்ன இது கூட்டம்?'' என்று வினவினார்.

பிறகு தான் தெரிந்தது. ஆக்கூராரின் மிகுந்த மதிப்புக்கும் நட்புக்கும் பாத்திரரான இட்டப்பாவின் நெருங்கிய உறவினர் ஒருவர் அன்று காலை தான் ஆக்கூராரின் இல்லத்தில் காலமாகி விட்டார் என்பது.

இந்தத் துயர நிகழ்ச்சியினிடையிலும் சொன்ன சொல் தவறாமல் தமக்கு உதவ முன் வந்த ஆக்கூராரின் கடமை உணர்ச்சியை நினைத்து வள்ளியப்பாவுக்கு நெஞ்சம் நெகிழ்ந்து கண்ணீர் ததும்பி விட்டது. அன்று மட்டுமல்ல; இரங்கல் கூட்டத்தின்போதுந்தான்!






# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்






எஸ். வெங்கட்டரமணன்-பி. எஸ். சரஸ்வதி

சென்னை மெஸர்ஸ் கிங் & கம்பெனி (சிவில் & சானிடரி என்ஜினீயர்ஸ்) என்ஜினீயரும், சென்னை கார்ப்பொரேஷன் அங்கத்தினருமான ஸ்ரீ பி. எஸ். கிருஷ்ணமணி அவர்களின் சகோதரி சௌ: சரஸ்வதி, B. A. க்கும் கல்கத்தா L.I.C.ஐச் சேர்ந்த ஸ்ரீ ஆர். சுவாமிநாதன் அவர்கள் புதல்வன் சிரஞ்சீவி எஸ். வெங்கட்டரமணன் (எஸ். வி. அய்யர்) M.A., L.L.B., C.A.I.I.B. அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

# ராம்தீர்த் பிரஹ்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சியளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்.

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

**SHRI RAMTIRTH YOGASHRAM**

**DADAR - BOMBAY-14**

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3
போன்: 34258

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன



# தேர்தல் எதற்காக?

நாடு போய்க் கொண்டிருக்கும் நிலையில் வரும் தேர்தல் எப்படி நடக்கப் போகிறதோ என்கிற கவலை யாருக்கும் ஏற்படத்தான் செய்யும்! அதிசயபுரியில் தேர்தல்களை எப்படி நடத்துகிறார்கள் என்று பார்த்து விட்டு வந்தால் என்ன என்று தோன்றவே, வெகு நாட்களாகப் பயன்படுத்தாமல் ஷெட்டில் வைத்திருந்த என் மனோரதத்தில் ஏறிக் கொண்டு அதிசயபுரி சென்றேன்.

சென்றதும், அங்குள்ளவர்களைப் பார்த்து, ''உங்கள் நாட்டில் தேர்தல்கள் எப்பொழுது வரப் போகின்றன! அதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்!'' என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள், ''தேர்தலா? அதைப் போன்ற ஒரு அநாவசியச் செலவான காரியம் ஒன்று உண்டா? நாங்கள் தேர்தல்களே வேண்டாம் என்று தீர்மானித்து எத்தனையோ வருஷங்கள் ஆகின்றனவே!'' என்று பதில் அளித்தார்கள்.

''தேர்தலால் அநாவசியச் செலவா? எப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''ஏன் அநாவசியச் செலவு இல்லை? தேர்தல் என்றால் எல்லா அபேட்சகர்களும் லட்சம் லட்சமாகப் பணத்தைச் செலழிக்கவேண்டியிருக்கிறது. பிறகு அவர்கள் சட்ட சபையில் கூடிப் பேசும்போதெல்லாம் பணம் செலவாகிறது. மந்திரிகளும் தாங்கள் செய்ய வேண்டிய வேலையை விட்டு விட்டு, சட்ட சபையில் உட்கார்ந்து கொண்டு, கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் சொல்வதையே தங்கள் முழு நேர வேலையாக வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. பிறகு சட்ட சபையில் அங்கத்தினர்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொள்ள ஆரம்பித்தால், அவர்களைப் பிரிப்பதற்கோ, அல்லது அவர்களை அலக்காகத் தூக்கி, சட்டசபைக்கு வெளியே கொண்டு போய் விடுவதற்கோ, மிக பலசாலியான 'மார்ஷல்'கள் தேவையாக இருக்கின்றனர். ஆகவே, இந்தத் தொல்லைகளையெல்லாம் உத்தேசித்து, தேர்தல்கள் தேவையில்லை என்று ரத்துச் செய்துவிட்டோம்'' என்றார்கள்.

''அப்படியானால் உங்கள் நாட்டில் இப்பொழுது ஜனநாயகம் இல்லையா? எதேச்சாதிகாரம்தான் நடக்கிறதா?'' என்று கேட்டேன்.

''யார் சொன்னார்கள்? பொதுமக்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்வதற்குத் தேர்தல் ஒன்றுதான் முறையா? அதைவிடச் சிறந்த முறையொன்று வைத்திருக்கிறோம். அவ்வப்பொழுது எழும் பிரச்னைகள் விஷயமாகப் பொதுஜனங்கள் என்ன அபிப்பிராயப்படுகிறார்கள் என்பதை அவ்வப்பொழுதே தெரிந்து கொண்டு விடுவோம். இன்னும் சர்க்காரின் மீது மக்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா, இல்லையா என்பதையும் இதைக் கொண்டே தெரிந்து கொள்வோம்'' என்றார்கள்.

''அது என்ன முறை?''

''அதை வாயினால் விளக்கினால் புரியாது. நல்ல வேளையாக இந்த ஊரில் இன்று மாலை நான்கு மணிக்கு அந்த முறை பயன்படப் போகிறது. தாங்கள் நேரில் வந்து பார்க்கலாம்'' என்று சொன்னார்கள்.




மாலை நான்கு மணி எப்பொழுது வரப் போகிறது என்று வெகு ஆவலாகக் காத்துக் கொண்டிருந்தேன். மணி மூன்றேமுக்கால் ஆனதும், அவர்கள் என்னை ஒரு வண்டியில் ஏற்றி, ஊருக்கு வெளியே பத்து மைல்களுக்கு அப்பாலிருந்த ஒரு சிறிய ரயில்வே ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றார்கள்.

அந்த ஸ்டேஷனின் தண்டவாளத்தின் இருமருங்கும் ஏகக் கூட்டமாக இருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு ரயில் வண்டி வெகு வேகமாக வந்து அந்த ஸ்டேஷனில் நின்றது. ரயிலிலிருந்து பிரயாணிகள் இறங்கப் போகிறார்கள் என்று பார்த்தால் யாரும் இறங்க வில்லை. ரயில் பெட்டிகள் எல்லாம் ஓட்டைகளாகவும், உடைசல்களாகவும், நசுங்கியும் நொறுங்கியும் காணப்பட்டன.

வண்டி நின்றதும், என்ஜினிலிருந்து வண்டியை ஓட்டிக் கொண்டிருந்த மூன்று பேர் இறங்கி, கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்து கொண்டார்கள். கடைசிப் பெட்டியில் இருந்த கார்டும் கீழே இறங்கி, கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்து கொண்டார்.

பிறகு கூட்டத்தினரில் பாதிப் பேர், ரயிலுக்கு முன்னால், தண்டவாளத்தில் போய்ப் படுத்துக் கொண்டனர். மறு பாதியினர் முதல் பெட்டியை நோக்கி ஓடினார்கள். அது நிறைய கூழாங் கற்கள் நிரப்பி வைக்கப்பட்டிருந்தது. எல்லாரும் கைநிறையக் கற்களை எடுத்துப் பெட்டிகளை நோக்கி வீசினர்.

''எதற்காக இப்படி ரயில் வண்டியை நிறுத்தி, இப்படி ரயில் பெட்டிகளையெல்லாம் கற்களை கொண்டு தாக்குகின்றனர்?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள், ''எந்த விஷயத்தைப் பற்றியும் பொதுவான அபிப்பிராயத்தை அறிவதற்கு இதுதான் நாங்கள் இப்பொழுது கொண்டுள்ள வழி. இதற்கென்றே நாங்கள் ஒரு தனி ரயில் வண்டி வைத்திருக்கிறோம். அதில் உள்ள பெட்டிகள் எல்லாம் ஓட்டை, உடைசல் பெட்டிகளாகத்தான் இருக்கும். இந்த ரயில் வண்டியை எந்தெந்த ஸ்டேஷன்களில் தாக்கலாம் என்று நாறு ஸ்டேஷன்கள் குறிப்பிட்டுள்ளோம். பழைய காலத்தில், ராஜாக்கள் தங்கள் பராக்கிரமத்தைக் காட்டுவதற்காக, அசுவமேத யாகக் குதிரையை அனுப்பி வைப்பார்களே, அது மாதிரி நாங்கள் ஏதாவதொரு பிரச்னையைப் பற்றிப் பொதுஜன அபிப்பிராயம் அறிய வேண்டுமானால், இந்த ரயில் வண்டியை அந்த நாறு ஸ்டேஷன்களுக்கும் அனுப்பி வைப்போம். இந்த வண்டியை எத்தனை ஸ்டேஷன்களில் தாக்குகிறார்கள், எத்தனை ஸ்டேஷன்களில் தாக்காமல் இருக்கிறார்கள் என்பதைக் கொண்டு பொதுஜன அபிப்பிராயம் எப்படி இருக்கிறது என்பதைத் தீர்மானிப்போம்'' என்றனர்.

''ஆமாம், முன் பெட்டியில் இருந்த அத்தனை கூழாங்கற்களையும் இந்த ஸ்டேஷனிலேயே காலி பண்ணிவிட்டார்களே, அடுத்த ஸ்டேஷன்காரர்கள் என்ன செய்வார்கள்?''

''அதற்கு ஏற்பாடு செய்யாமல் இருப்போமா! இன்று ராத்திரியானாலும், அடுத்த ஸ்டேஷனில் காத்துக் கொண்டிருப்பவர்களுக்கு உபயோகமாக இருக்கும்படியாக, முன் பெட்டி நிறைய கூழாங்கற்களை நிரப்பி வைத்து விடுவோம்!''

''ஆமாம், இப்பொழுது ரயிலைத் தாக்கிக் கொண்டிருக்கிறார்களே, இதனால் என்ன தீர்மானமாயிற்று ?''

''நாங்கள் நிறுவ விரும்பும் ஒரு முக்கியமான ஆலையை இந்தப் பக்கத்தில்தான் நிறுவ வேண்டும் என்பது தீர்மானமாயிற்று.''

பட்....பட்....!




"உன் கடைப் பட்டாசு எல்லாம் பெட்ரோல் போட்டுப் 'புடம்' போட்டாக்கூடப் பத்தமாட்டேங்குது. இந்த லட்சணத்துக்கு இந்தப் போர்டு வேறே கேடா!"

★

ஙீச்....ஙீச்....!




"டேய் எண்ணெய்க்கோடா, அப்பா ஊஞ்சல் வளையத்துக்கு எண்ணெய் போடறதை! இது மூணாவது தடவை!"

"ஆனால் இதே மாதிரி மற்றப் பகுதியினரும் ரயிலை நிறுத்தித் தாக்கினால்?"

"அதுதானே வேடிக்கை! இந்த ஆலையை எங்கு நிறுவுவது என்பதைப் பற்றி இரண்டு வருடங்களாகச் சர்ச்சை நடந்து வருகிறது. முதலில் வடக்குப் பகுதியில் இருந்த ஸ்டேஷன்களில்தான் ரயில் வண்டி தாக்கப்பட்டது. சரி, ஆலையை வடக்குப் பகுதியில்தான் நிறுவ வேண்டும் என்று நாங்கள் நினைத்துக் கொண்டிருந்த சமயம், கிழக்குப் பகுதியினர் வண்டியைத் தாக்க ஆரம்பித்தார்கள். சரி, கிழக்குப் பகுதியில்தான் நிறுவ வேண்டும் என்று தீர்மானித்த சமயம், தென் பகுதியினர் தாக்க ஆரம்பித்தார்கள். சரி, தென் பகுதியில் நிறுவலாம் என்று தீர்மானித்த சமயத்தில் இப்பொழுது மேற்குப் பகுதியினரும் தாக்க ஆரம்பித்து விட்டார்கள்."

"அப்படியானால் என்ன செய்வீர்கள்?"

"அதைப் பற்றிக் கவலைப்பட்டு முடியுமா? எங்களைச் சுற்றியுள்ள எல்லா நாடுகளும் எதேச்சாதிகாரமாக மாறிக் கொண்டிருக்கும் போது, நாங்கள் ஜனநாயகத்துடன் இயங்குகிறோமே, அதைக் குறித்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறோம்."

"இப்படி ஒரு ஆலையும் நிறுவப்படாவிட்டால் உங்களுக்குத்தானே நஷ்டம்!"

"நஷ்டம்தான். ஆனால் நாங்கள் ஜனநாயக முறைகளைக் கடைப்பிடிக்கும் வரையில் எங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதற்கென்றே, ஜனநாயகத்தில் மிகவும் நம்பிக்கையுள்ள இன்னொரு நாடு காத்துக் கொண்டிருக்கிறது. ஆகவே நாங்கள் ஆலைகள் நிறுவவில்லையே என்று கவலைப்படுவதில்லை..... ஆமாம், உங்கள் நாட்டிலும் ரயில் வண்டிகளைத் தாக்க ஆரம்பித்திருக்கிறார்கள் போலிருக்கிறதே!" என்று கேட்டார்கள்.

"தாக்க ஆரம்பித்திருக்கிறார்கள். ஆனால் காலிப் பெட்டிகளுக்கு நாங்கள் ஏற்பாடு பண்ணாததால், பிரயாணிகள் உள்ள பெட்டிகளையே தாக்க ஆரம்பித்திருக்கிறார்கள்" என்றேன்.

"எப்பொழுது ரயில் வண்டிகளைத் தாக்கும் பழக்கம் மக்களுக்கு ஏற்பட்டு விட்டதோ, இனி எங்கள் முறையைப் பின்பற்றுவதில் உங்களுக்கு ஒரு கஷ்டமும் இருக்கத் தேவையில்லையே! வெகு எளிதில் எங்கள் முறையை நீங்களும் பின்பற்றலாமே! வரப் போகும் தேர்தலும் அதனால் ஆகக் கூடிய செலவும் தேவையில்லை என்று தீர்மானித்து விடலாமே!" என்றார்கள்.

"ஆனால் இப்புது வழியை மக்கள் ஒத்துக் கொள்ள வேண்டுமே!"

"அதற்கும் ஒரு காலி ரயிலை அனுப்பி அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டால் போச்சு!" என்றார்கள் அதிசயபுரிவாசிகள்!

எனக்குக் கூட ரொம்ப நாட்களாக ரயில் பெட்டிமேல் கல்லெறியவேணுமென்ற ஆசை! அதைத் திருப்திப் படுத்திக் கொண்டு அதிசயபுரியிலிருந்து திரும்பினேன்!

# வலிதான் எங்கள் பிரச்சினை...

## உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

ஆராய்ச்சி: 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை வகிப்பவன் நான். எங்களுடைய பணி வலியை நிறுத்த மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' பார்முலா தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம்.

சமீபத்தில், அமெரிக்க அரசாங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற சோதனைகள் 'ஆஸ்ப்ரோ' விலுள்ள கருவுறுப்பாக இயங்கும் கூட்டுப் பொருள்தான் மிகவும் தரமான மற்றும் பயனுள்ள வலிநிவாரணி என்று தெளிவாக நிரூபித்துள்ளன. அதனால்தான் அது உலக முழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

வலி என்பது என்ன? உயிர்ப்பொருள், உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு "மறைமுகமான" வீக்கத்திற்குக் காரணமாகிவிட அது நரம்புகளை அழுத்துவதின் மூலம் வலி ஏற்படுகிறது.

'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி? 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: வலி • தலை வலி • உடல் வலி • பல் வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு.




அளவு:
பெரியவர்கள்:
இரண்டு மாத்திரைகள், தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும்.

குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொல்படி.

A.G.36.64 TAM

# 'ஆஸ்ப்ரோ' வலியை வெளியே இழுத்துவிடுகிறது!

# நீதி நிலைத்தது!

## நடந்ததுதான் நம்புங்கள்!



"ஏண்டா, பரமசிவம்! உன் மனசிலே என்னடா நினைச்சுக்கிட்டு இருக்கே? நாலு நாளா நீ பணத்தையே கண்ணிலே காமிக்கலே. நாளைக்கு ராவுலேயும் வெறுங்கையோடே வந்து நின்னே, அப்புறம் நான் வேறே ஆள் பார்த்து வண்டியை ஒப்படைச்சுடுவேன்! நீ என்ன கதறினாலும் நான் காதிலே போட்டுக்கிட மாட்டேன்" என்று பலமாக இரைந்தேன்.

பரமசிவம் பதில் சொல்லாமல் தலையை குனிந்து கொண்டு நின்றான்.

அவனுக்குப் போதாத காலம் என்றுதான் சொல்லணும். இல்லாத போனால் நான் அத்துடன் பேச்சை நிறுத்தியிருக்க மாட்டேனா? தொடர்ந்து, "இந்தச் சின்னப் பயல் காளிமுத்து எத்தனை ஒழுங்கா தினசரி வாடகைப் பணத்தைக் கொணர்ந்து கட்டறான்! உன் வயசிலே பாதி இருப்பானடா அவன் ? அவனுக்கு இருக்கிற அறிவிலே ஆயிரத்திலே ஒரு பங்கு உன்கிட்டே இருக்காடா ?" என்று சீறுவேனா ?

பரமசிவம் மீசையைத்தான் முறுக்கிக் கொண்டானே தவிர பதில் பேசாமலே இருந்தான். அவன் பார்வை மாத்திரம் அலட்சியமாகக் காளிமுத்துவின் மேல் பதிந்தது.

காளிமுத்துவுக்குப் போதாத காலம் அவன் வாயைத் திறந்து வைத்தான். "இப்பவெல்லாம் அண்ணன் ஷோக்கிலல்ல இறங்கியிருக்காரு! மௌண்ட் ரோட் ஹோட்டலிலே பிரியாணி சாப்பிடப் போனா ரிக்ஷா வாடகையை எப்படிக் கொடுக்க முடியும்னு கேட்கிறேன்!" என்று சொல்லி வைத்தான்.

"பொடிப் பயலே! நாக்கைத் துண்டிச்சுடுவேன் " என்று பாய்ந்தான் பரமசிவம்.

"உஷ்! ரோஷம் இருந்தாப் போதுமாடா? கூடவே நாணயம் இருந்தா இல்லே அதுக்கு மதிப்பு? போடா, நாணயம் கெட்ட பயலே! அவன்கிட்ட வாலாட்டாதே! உன் பிழைப்பைப் பாரு..... டேய், காளிமுத்து, நீ போடா !" என்று இருவரையும் அனுப்பி வைத்தேன்.

எனக்குச் சொந்தமான சைக்கிள் ரிக்ஷா இரண்டை அன்றாட வாடகைக்கு எடுத்து ஓட்டுகிறவர்கள்தான் பரமசிவமும் காளிமுத்துவும். காளிமுத்து ஐந்தாறு மாசங்களாகத்தான் என் வண்டியை எடுத்து ஓட்டறான். நல்ல பையன். இருபத்தி அஞ்சு வயசு இருக்கும். பரமசிவம் ஒரு முரடன். நாற்பத்தி அஞ்சு வயசு இருக்கும். பரமசிவம் பெரியமேட்டிலே ஒரு குடிசையிலே இருந்தான். காளிமுத்து யாரோ சொந்தக்காரங்களோடே மூலைக்கொத்தளத்திலே இருந்தான். இரண்டு பேரும் தினம் ராத்திரி எந்த நேரமானாலும் வியாசர்பாடியிலுள்ள என் வீட்டுக்கு வந்து வண்டியை விட்டுட்டுப் போவாங்க.

கொஞ்ச நாட்களாகப் பரமசிவம் வாடகை விஷயத்திலே ஒழுங்காக நடந்து கொள்ளவில்லே. முனையிலேயே கண்டிக்கலேன்னா நான் தானே நஷ்டப்படணும்?

அடுத்த நாள் ராத்திரியும் பரமசிவம் பணம் கட்டவில்லே. சும்மாத்தான் வந்தான். அவன் வந்த நேரத்திலே காளிமுத்துவும் நின்று கொண்டிருந்தான்.

"என்ன பரமசிவம்! பணத்தை எடு!" என்றேன் அதட்டலாக.




அவன் ஏதும் பதில் சொல்லுவதற்கு முன்னலே அவசரக் குடுக்கையாகக் காளிமுத்து பேசி வைத்தான். ''அண்ணன்கிட்டே ஏது பணம்? அதுதான் ஓட்டேரி மங்கம்மாவுக்குப் பதிமூனு ரூபாய்க்குச் சேலை வாங்கிக் கொடுத்துட்டாரே'' என்று தன் மனத்தில் இருந்த ரகசியத்தை அப்படியே போட்டு உடைத்து விட்டான்.

நான் மாத்திரம் எழுந்திருந்து வந்திருக்கா விட்டால் பரமசிவம் காளிமுத்துவை அடித்தே இருப்பான். அவனுக்கு அத்தனை ஆத்திரம்!

''பரமசிவம்! நீ எக்கேடு கெட்டுப் போ!... பணத்தைப் பாக்கி இல்லாம கட்டினுத்தான் நீ வண்டியைத் தொடலாம்! டேய், காளிமுத்து! உனக்குத் தெரிஞ்சவங்க யாரும் யோக்கியமானவனுயிருந்தால் கூட்டியாடா. அந்த வண்டிக்கு ஆள் வேணுமில்லே?'' என்று முத்தாய்ப்பு வைத்தேன்.

''டேய், பொடியா! நீ ஆள் கூட்டியாந்திருவியா? நான் பார்க்கிறேண்டா சோமாரிப் பயலே!.....'' என்று பரமசிவம் உறுமிக் கொண்டே போனுன். நாட்டுச் சரக்குக் கொஞ்சம் உள்ளே போயிருக்குமோ என்ற சந்தேகம் எனக்கு.

அப்புறம் நாலைந்து நாட்கள் வரை பரமசிவம் வரவேயில்லை. மீண்டும் அவனை ஒரு விநோதமான சந்தர்ப்பத்திலேதான் பார்க்க முடிந்தது.

நான் எப்பவுமே காற்றுக்காக வாசல் திண்ணையிலே கட்டிலைப் போட்டுப் படுக்கிறது வழக்கம். அன்னிக்கும் அப்படித்தான் படுத்திருந்தேன்.

ராத்திரி ஒரு மணிக்கு மேலாகியிருக்கும். தலைமாட்டிலே ஏதோ சத்தம் கேட்டமாதிரி இருந்தது. விழிச்சுக்கிட்டு உட்கார்ந்தேன். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

இரண்டு போலீஸ்காரங்க ஒரு முரட்டு ஆளைப் பிடிச்சுக்கிட்டு நின்னுக்கிட்டு இருந்தாங்க. முதலிலே எல்லாம் மங்கலாத் தெரிஞ்சது. அப்புறம் அந்த ஆள் கையிலே ஒரு கத்தி இருந்ததுகூடத் தெரிஞ்சது.

பதறிப் போயி கட்டிலிலிருந்து குதிச்சு நின்னேன். அதுக்குள்ளே வீட்டுக்குள்ளேயிருக்கிற பொம்பளைங்க சத்தம் கேட்டுக் கதவைத் திறந்து ஹரிக்கேன் விளக்கோடு வந்து எட்டிப் பார்த்தாங்க.

நான் அப்பத்தான் அந்த முரட்டு ஆளைச் சரியாக் கவனிச்சேன். பரமசிவம் பயல்தான் போலீஸ்காரங்க பிடியிலே நின்னுக்கிட்டிருந்தான். அவன் கையிலிருந்த கத்தியிலே ரத்தக் கறை இருந்தது. அவன் வேட்டி பனியனிலும் சிவப்புத் திட்டு இருந்தது.

என்னையேதான் எங்கேயாவது குத்திக் கித்திப் போட்டானே என்ற அர்த்தமற்ற பயம். என்னையே நான் பார்த்துக் கொண்டேன். நல்ல வேளையாக ஒரு போலீஸ்காரரே முன்னால் பேசினர்.

''நாங்க இந்தப் பக்கமா ரோந்து வந்துக்கிட்டு இருந்தோம். உங்க வீட்டு வாசப்படியிலிருந்து என்னவோ சத்தம் வந்தது. டார்ச் விளக்கைப் போட்டுப் பார்த்தால் இந்த ஆசாமி தன் கையிலிருந்த கத்தியை வாசற்படியிலே தீட்டிக்கிட்டு இருந்தான். கத்தியிலே ரத்தக் கறை இருக்கு! இவனை உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார். எனக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது.

''ஏண்டா, பரமசிவம்!.... என்னடா இது? கையிலே கத்தி, அதிலே ரத்தம்.... நடுராவிலே இங்கே ஏண்டா சுத்தறே? சொல்லுடா!'' என்று அதட்டிவிட்டுப் போலீஸ்காரங்ககிட்டே பரமசிவம் எனக்குத் தெரிஞ்சவன்தான் என்பதையும் சொன்னேன்.

பரமசிவம் கொஞ்சம்கூடப் பயந்தவனுகவோ நடுங்குகிறவனுகவோ தெரியவில்லை. நிதானமாகப் பதில் சொன்னுன்.

''ஒண்ணுமில்லீங்க முதலாளி! இந்தப் பக்கமா வந்துகிட்டிருந்தேன். ஒரு நாய் ஒண்ணு மேலே பாஞ்சிருச்சுங்க! தெருப் பொறுக்கி நாய்தான். ஆனல் முரடு! கத்தியாலே குத்தித் தீர்த்துப்புட்டேன்! அந்தக் கத்தியை இங்கே துடைச்சுக்கிட்டு இருந்தேன். டாணுக்காரங்க விளக்கு அடிச்சுப் பார்த்தாங்க! அவ்வளவுதானுங்க!'' என்று கூறினுன்.

அவன் சொல்வது உண்மைபோல்தான் எனக்குத் தோன்றியது. ஆனல் அந்த ராத்திரியில் அவன் ஏன் வியாசர்பாடிப் பக்கம்

சொன்னவர் : திருவேங்கடாச்சாரி
(ரிடையர்டு போலீஸ் இன்ஸ்பெக்டர்)
கேட்டுக் கதைபோல் எழுதியவர் : மேனு

வந்து சுற்றிக் கொண்டிருந்தான் என்று கேட்க எனக்குத் தோன்றவில்லை.

ஆனால் ஒரு டாணாக்காரர், ''சரிதாம்பா! அந்த நாய் எங்கே கிடக்குன்னு காண்பிச்சுடு! அப்பாலே நாங்கபாட்டுக்கு டியூட்டிமேலே போறோம். எங்களுக்குச் சந்தேகம் தெளிஞ்சுடுமில்லே!'' என்றார்.

''ஆமாம், ஆமாம்! அது நியாயமான விஷயம்தானே!'' என்று கூறித் தலையை ஆட்டினேன்.

''அது கத்திக்குத்து வாங்கிக்கிட்டு வாள் வாள்னு கத்திட்டு ஓடிருச்சுங்களே!'' என்று இழுத்தான் பரமசிவம்.

மற்றொரு டாணாக்காரர் கைப்பிடியை இறுக்கினார். ''அப்படீங்களா? அந்த நாயைக் கண்டு பிடிக்கிற வரை நீங்க லாக்கப்பிலே தான் குந்திக்கிட்டு இருக்கணும். அதுவாகவே வந்துகூட நாளைக்கு ரிப்போர்ட் பண்ணலாமில்லே!'' என்று கிண்டலாக ஆரம்பித்து, ''போடா, சோமாரி! நடடா, ஸ்டேஷனுக்கு! பொழுது விடிஞ்சா எல்லாம் தெரிஞ்சு போகுது!'' என்று பரமசிவத்தை இழுத்துக் கொண்டு நடந்தார்கள் டாணாக்காரர்கள்.

எனக்கு அப்போகூட அவன் மேலே சந்தேகம் தோணலே! என் கவலையெல்லாம் இந்தப் பயல் இந்தச் சாக்கிலே எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைத் தாமதப்படுத்துவானோ என்பதுதான்!

மறு நாள் காலையிலே ஒழுங்கா வர காளிமுத்துப் பயலைக்கூடக் காணோம். பத்து மணிக்கு மேலே ஒரு டாணாக்காரர் என்னைத் தேடிக்கிட்டு வந்தாரு. பரமசிவம் விஷயமாக்கும்னுதான் நான் முதலிலே நினைச்சேன். ஆனால் ஆசாமி புதுசு. வண்ணாரப் பேட்டை ஸ்டேஷனிலிருந்து வந்தாராம். அவர் சொன்ன விஷயம் என்னைக் கதிகலங்க வச்சிருச்சு.

முதல் நாள் ராத்திரி பன்னிரண்டு மணி சுமாருக்குக் காளிமுத்து தான் இருக்கிற வீட்டு முற்றத்து வராந்தாவிலே படுத்துத் தூங்கிக்கிட்டு இருந்தானாம். யாரோ உள்ளே வந்து கத்தியாலே அவனைக் குத்தியிருக்காங்க. அவன் விழிச்சிக்கிட்டு, 'பரமசிவம், பரமசிவம்'னு கத்தியிருக்கான். குத்தினவன் அப்படியே சுவரிலே ஏறி அப்பாலே குதிச்சு ஓடிட்டான்.

போலீசுக்குத் தகவல் போச்சு. இன்ஸ்பெக்டர் வரதுக்குள்ளே காளிமுத்து ரத்தப் போக்கினாலே நினைவு இழந்துட்டான். ராயபுரம் ஆசுபத்திரிக்குக் கொண்டு போறதுக்குள்ளே அவன் உசிரும் போயிடுச்சு!

காளிமுத்து என் ரிக்ஷாவை வாடகைக்கு அடிக்கிறவன்கிற ஹோதாவிலே என்னை விசாரிக்க வந்திருக்காங்க.

''அட, பாவி! பரமசிவம்! உனக்கென்னடா கொள்ளை வந்து விட்டது!'' என்று வாய்விட்டு அலறிக்கொண்டே அந்த டாணாக்காரரையும் கூட்டிக்கிட்டு வியாசர்பாடி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனேன். இனி மேல் அவங்க பாடு!

லாக் அப்பிலே இருந்த பரமசிவத்தை இன்ஸ்பெக்டர் விசாரித்தார். அவன், 'இதெல்லாம் அபாண்டம். எனக்கு ஒண்ணுமே தெரியாது'ன்னு கதறினான். எனக்குக் கூட அவன் சொல்றதிலே உண்மை இருந்தது போல்தான் தோணிச்சு! இது ஏதோ சந்தர்ப்பச் சதி மாதிரியும் இருந்தது.

''டேய்! உண்மை உன் பக்கம் இருந்தால் ஏண்டா பயப்படறே!... சத்தியம் ஜெயிக்கும்டா!'' என்று ஆறுதல் சொல்லிவிட்டு நான் வந்தேன். ஆனால் போலீசிலே அவன் தான் காளிமுத்துவைக் கொன்னவன்னு நிச்சயம் பண்ணிட்டாங்க. கேஸ் விசாரணை ஆரம்பமாயிருச்சு.

பரமசிவம் கொஞ்சம்கூட மனம் தளரலே! குண்டு தைரியமா இருந்தான். 'எனக்கு வலுவான சாட்சி இருக்கு! என் வக்கீல் கெட்டிக்காரரு' என்று திருப்பித் திருப்பிச் சொன்னான். எனக்கும் ஒரு திருப்தி. என் வண்டியை எடுத்து வாடகைக்கு அடிச்சவன் கொலைகாரனா ஆகமாட்டான்னு ஒரு நம்பிக்கை.

செஷன்ஸ் கோர்ட்டிலே விசாரணை. பிராசிகூஷன் தரப்பு வக்கீல் தேவைக்கு அதிகமான நம்பிக்கையுடனேயே அலட்சியமாக இருந்தார். 'ஃபர்ஸ்ட் இன்பர்மேஷன் ரிப்போர்ட்' தாக்கல் செய்த இன்ஸ்பெக்டரைக்கூட அவர் அதிகம் விசாரிக்கவில்லை. எப்படியும் குற்றவாளி தப்ப முடியாது என்ற உறுதியின் அடிப்படையில் அலட்சியமாகவே இருந்தார்.

டிபென்ஸ் தரப்பில் விசாரணை தொடங்கியது. அதே போலீஸ் இன்ஸ்பெக்டர் சாட்சிக் கூண்டில் நின்று கொண்டிருந்தார். அவர் மனத்திரையில் பிரஸ்தாப குற்றம் நடந்த இடம் நன்கு பதிந்திருந்தது. திறந்த வெளி முற்றம். ஒரு பக்கத்தில் ஓட்டுச் சாரத்தின் கீழுள்ள வராந்தா. எதிர்த்தாற் போல் ஒரு சுவர். சுவருக்கு மறுபக்கம் ஒரு சந்து.

சம்பிரதாயமான கேள்விகளைக் கேட்டுக் கொண்டே வந்த டிபென்ஸ் வக்கீல் தொண்டையைக் கனைத்துக் கொண்டு இன்ஸ்பெக்டரைப் பார்த்து, ''பிரஸ்தாப குற்றம் நடந்த இடத்தில் குற்றம் நடந்ததாகச் சொல்லப்படும் வேளையில் விளக்கு ஏதும் இருந்ததா?'' என்று கேட்டார்.

''இல்லை அல்லது இருந்தது'' என்று மாத்திரமே பதில் சொல்ல வேண்டிய நிலை. அதற்கு மேல் ஏதும் சொல்ல முடியாது.

''இல்லை'' என்ற பதில் இன்ஸ்பெக்டரிடமிருந்து வந்தது.

கோர்ட்டில் ஒரே நிசப்தம். குற்றவாளி பரமசிவத்தின் முகத்தில் பூரிப்பு.

'இந்த ஒரு பாய்ண்ட் போதுமே குற்றம் ருசுவாகாமல் போக' என்று கோர்ட்டில் குழுமியிருந்தவர்கள் அனைவரும் முடிவு செய்து விட்டார்கள்.

''ஆண்டவனே! பரமசிவத்தின் மேலே அடாப் பழிதான் விழுந்திருந்தது. நல்லவேளை அவன் தப்பினான்'' என்று சந்தோஷப்பட்டேன்.

**'பலனைப் பொறுத்தவரையில் எல்லா தலைவலி மாத்திரைகளும் ஒன்றுதான்' என்பது உங்கள் எண்ணமானால்**



**உபயோகித்துப் பாருங்கள்**




ஸ்க்விப் அளிக்கும்

# அவேதன்®




அற்புத 'எபெப்' அடங்கிய டேப்லெட்டுகள்! இவை துரிதமான, பத்திரமான, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கின்றன!

'எபெப்' அடங்கிய அவேதன் டேப்லெட்டுகள் நிமிடக்கணக்கில் செயல்புரிந்து மணிக்கணக்காகப் பயனளிக்கின்றன.

தலைவலி, பல்வலி, முதுகுவலி, தசைசார் பிடிப்பு, ஜலதோஷம்,ஃப்ளு, பெண்களின் அசௌகரியமான நாட்கள் மற்றும் இதர வலிகள், உபாதைகள் முதலியவற்றிற்கு—அவேதன்.

SQUIBB® — ஸாராபாய் கெமிகல்ஸ்

® இது இ. ஆர். ஸ்கவிப் அண்டு சன்ஸ் இன்கார்ப்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்காகும். சாம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமைபெற்றவர்கள்.

காளிமுத்து சாகும் தருவாயில் 'பரம சிவம்! பரமசிவம்!' என்று கத்தியதைக் கேட்டதாகக் கோர்ட்டில் கூறியிருந்தார்கள். ஆனால் பரமசிவத்தை விளக்கு இல்லாத இருட்டில் காளிமுத்து எப்படி அடையாளம் கண்டு கொள்ள முடியும்? இந்தச் சந்தேகத்தைச் சாமர்த்தியமாகக் கிளப்பிவிட்டார் வக்கீல். பரமசிவம் விடுதலை அடைந்து ஹாயாக வெளியே வந்துவிடுவான் என்று மனத்துக்குள் தீர்மானித்து விட்டேன்.

ஆனால், நீதி, தர்மம், விதி என்ற நியதிகள் உலகத்தில் இருக்கின்றனவே !

தன் வாதத்துக்கு ஒதுக்க வேண்டிய விஷயத்தையே டிபென்ஸ் வக்கீல் வாய் தவறி அடுத்த கேள்வியில் போட்டு விட்டார்.

''விளக்கு இல்லை என்றால் வராந்தாவுக்கு வருபவர்கள் யார் என்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டு வைத்தார்.

இன்ஸ்பெக்டர் முகத்தில் புன்னகை மலர்ந்தது. பிராசிகூஷன் வக்கீலுக்கு இழந்த தெம்பு திரும்பியது.

''சொல்ல முடியும். எதிரே உள்ள கவர் குட்டையானது. அதற்கு மறுபக்கம் உள்ள தெரு மின்சார விளக்கு ஒளி வராந்தா கடைசி வரை வீசியது. அந்த வெளிச்சத்தில் தான் நான் என் டயரியைக்கூட எழுதினேன்'' என்று படபடவென்று கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பொழிந்து தள்ளி விட்டார் இன்ஸ்பெக்டர்.

விதி தர்மத்தின் வழியிலே புகுந்தது. நீதிபதியின் மனத்தில் எழுந்த சந்தேகம் விலகிப் போய் விட்டது.

பரமசிவத்துக்கு ஆயுள் தண்டனை.

போலிஸ் வானில் அவன் ஏறும்போது நான் இருந்தேன். இப்போதுதான் அவன் கண்களில் பொலபொலவென்று நீர் பொங்கியது.

''முதலாளி! அன்னிக்கு உங்க முன்னாலே காளிமுத்துப் பயல் என்னை அவமானப் படுத்தினான். தூக்கி எறிஞ்சு பேசினான். அவனைக் கொன்னு அவன் ரத்தத்தை உங்க வீட்டு வாசற்படியிலே கொணாந்து பூசறதுன்னு சபதம் போட்டேன். அதை நிறைவேற்றினேன். அந்த வெறி அடங்கினப்புறம் பயம் வந்திருச்சு. தப்பிக்கலாம்னு ஆசைப் பட்டேன். ஆனால் நியாயம்னு ஒண்ணு இருக்குல்ல! அது சரியான நேரத்திலே என் வக்கீல் நாக்கிலே உட்கார்ந்து அதைப் புரட்டிருச்சு!... நான் கொலைகாரன்தான்!...'' பரமசிவத்தை ஏற்றிக் கொண்டு வான் புறப் பட்டு விட்டது!

இப்போது நான் ரிக்ஷா சொந்தக்காரன் இல்லை. இரண்டையும் விற்றுவிட்டேன்.

## 'மிக்ஸி மாமி' வருகிறாள்!

''லெட்சுமி! 'ப்ரெஷர் குக்கர்' வந்து விட்டது!'' என்று நரேன் என் காதில் கிசுகிசுத்தான். வாசலில் எட்டிப் பார்த்தேன். அம்மாவின் சிநேகிதி ஜயம்தான் வந்துகொண்டிருந்தாள். அவளுக்கு அம்மாவிடம் பேசுவதற்கு வேறு ஒரு விஷயமும் கிடைக்காது. எப்பொழுதும் தன்னிடம் இருக்கும் ப்ரஷர் குக்கர் விதரணையைப் பற்றித்தான் பேச்சு. அப்பாவி அம்மாவுக்கு இப்படிப்பட்ட சிநேகிதிகள் தான். ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு விதத்தில் 'போர்' அடிப்பாள்.

நரேன் எல்லோருக்கும் புது மாதிரி பேர் வைத்திருப்பான். ஒருத்தியின் பெயர் மிக்ஸி —காரணம் அவள் வெளி நாட்டு மிக்ஸியின் உதவியுடன் மாவரைக்கும் வசதி படைத்தவள். மற்றொருத்திக்குப் பெயர் காப்பி பார்குலேட்டர். இவளுக்கு எப்போதும் நிமிஷத்தில் தயாராகும் 'டிகாக்ஷன்' பெருமை.

அம்மாவுக்கும் மற்றவர்களைப் போல் எல்லா 'மாடர்ன்' சாமான்களையும் வாங்கிக் கொள்ள ஆசைதான். அப்பாவிடம் மெதுவாக விஷயத்தை ஆரம்பிப்பதற்குள் ''இவையெல்லாம் 'பெட் காப்பி' சாப்பிட எட்டு மணிக்கு எழுந்திருப்பவர்களுக்குத்தான் லாயக்கு. நீயோ விடியற்காலை நாலரை மணிக்கு எழுந்து விடுகிறாய். ஏழரை மணிக்குள் சமையலாகி விடுகிறது. உன்னைப் போல் சுறுசுறுப்பானவளுக்கு இவையெல்லாம் அநாவசியம்'' என்று அப்பா அம்மாவைத் தூக்கி வைத்துப் பேசிவிடுவார். அம்மாவுக்கு உச்சி குளிர்ந்து விடும். பிறகு அவள் வாய் மூடி மௌனியாகி விடுவாள்.

''காப்பிக் கொட்டை அரைக்க இப்படி வந்தேன். வரும் வழியில் உன்னைப் பார்த்து நாளாயிற்றே, எட்டிப் பார்க்கலாம் என்று வந்தேன்.'' — இவ்வாறு கூறிய வண்ணம் அகௌண்டண்ட் மனைவி பாலம் மாமி வருகை தந்தாள். என்றைக்குத்தான் அவள் உண்மையாகவே எங்கள் வீடு தேடி வந்திருக்கிறாள்? எப்பொழுதும் ஏதோ ஒரு காரணமாக, எங்கோ போகையில் வழியில் எட்டிப் பார்த்துவிட்டுப் போகத்தான் வருவாள். அவளுடைய காஸ் அடுப்பின் பெருமை — அம்மாவின் தலை ஆட்டல் எல்லாம் எனக்கு ஞாபகத்துக்கு வரவே, மெதுவாகச் சமையலறைக்குள் புகுந்து கொண்டேன். நிமிஷங்களுக்கு இரண்டு பாத்திரங்களைத் தட்டி உருட்டி ஒசை செய்துவிட்டு வெளியே வந்து, ''அம்மா! காஸை மூடிவிடட்டுமா? சமையல் முடிந்து விட்டது'' என்றேன். அம்மாவின் திகைப்பு அடங்குவதற்குள்ளாகவே, மாமி எழுந்து கொண்டே, ''நீயும் காஸ் அடுப்பு வைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டாயா? சொல்லவேயில்லையே!'' என்றாள் ஏமாற்றத்துடன். காற்றுப் போன பலூன் போல் அவள் முகம் சிறுத்து விட்டது. ''நான் கிளம்புகிறேன். காப்பிக் கொட்டைக் கடையில் கும்பல் சேர்ந்து விடும்'' என்று கூறியவாறு போய்விட்டாள்.

''என்னடி அந்த மாமியிடம் இப்படி 'காஸ்' அடித்தாய்!'' என்று சிரித்தவாறு உள்ளே நுழைந்தான் நரேன். — எஸ். பூரணி

முதல் பரிசு நாவல்

# முள்ளும் மலரும்

உமாசந்திரன்

அத்தியாயம் 16

"குமரன், இதற்கு முன்பு இரண்டொரு சமயங்களில் நான் இங்கே வந்திருக்கிறேன். இந்த வழியெல்லாம் எனக்குப் பழக்கமானதுதான்" என்று கூறியவாறு சபேசன் கார்க் கதவைத் திறந்து விட்டான்.

"அதற்காக நான் என் தங்கையையும் மாப்பிள்ளையையும் எதிர்கொண்டழைத்து வரும் இன்பத்தை இழந்து விட முடியுமா?" என்று சிரிப்புடன் கூறிக் கொண்டே காரில் ஏறி உட்கார்ந்தான் குமரன்.

"சென்னையிலிருந்து இவ்வளவு தூரம் காரிலேயே வருவது மிகவும் களைப்பாயிருந்திருக்குமே!" என்றான்.

கார் மீண்டும் புறப்பட்டது.

"நாங்கள் அங்கங்கே முகாம் போட்டு ஓய்வெடுத்துக் கொண்டுதானே வருகிறோம்! நேற்று மாலையே விஜயபுரத்துக்கு வந்து விட்டோம். இரவில் அங்கே பிரயாணிகள் பங்களாவில் தங்கி அலுப்புத் தீர வெந்நீரில் குளித்துவிட்டு நன்றாகத் தூங்கினோம். இன்று காலையிலும் அப்படித்தான். குளியலை முடித்துக் கொண்டு திருப்தியாகக் காலை ஆகாரமும் சாப்பிட்ட பிறகுதான் விஜயபுரத்திலிருந்து புறப்பட்டோம்" என்று விவரித்தான் சபேசன்.

"ஏதோ பிக்னிக் மாதிரி தோன்றுகிறதே ஒழியப் பிரயாணம் மாதிரியே தோன்றவில்லை" என்றாள் கனகா.

"பிக்னிக், ஹனிமூன் எல்லாந்தான்!" என்று சிரித்தான் சபேசன்.

அணைக்கரை வீட்டுக்கு இன்னும் நாலைந்து மைல்தான் பாக்கி இருந்தது. அப்போது அந்தக் காருக்கு என்ன தோன்றியதோ, மெள்ள மெள்ள அதனுடைய வேகம் குறைந்துகொண்டு வந்தது. எஞ்சினுடைய சத்தமே இல்லாமல் உயிரற்றுப் போனது போல் தோன்றியது. மறுபடியும் எஞ்சினை முடுக்கி விடுவதற்காக விசையை இழுத்து இழுத்துச் சபேசன் ஏதேதோ முயற்சிகள் செய்தும் ஒன்றும் பலிக்கவில்லை. கடைசியில் வண்டி நின்றே போய்விட்டது.

"பெட்ரோல் தீர்ந்து விட்டதா, என்ன?" என்றான் குமரன்.

"இல்லையே, காலையில் விஜயபுரத்திலிருந்து புறப்படும் போதுதானே புதிதாகப் பெட்ரோல் போட்டுக் கொண்டோம்" என்று கூறியவாறு சபேசன் காரை விட்டு இறங்கிச் சென்று காரின் முன்பக்கத்து மூடியைத் திறந்து எஞ்சினில் என்ன கோளாறு ஏற்பட்டிருக்கிறதென்று ஆராயத் தொடங்கினான். அதற்குள் குமரனும் காரிலிருந்து இறங்கி அவனருகே வந்து நின்றான்.

"பெட்ரோல் எஞ்சினுக்குச் சரியாகப் பாயவில்லையோ என்னவோ?" என்றான் குமரன் அந்தக் குழாயைப் பரிசோதித்தவாறு.



''காருக்கும் காது உண்டு என்று தெரிகிறது. பிக்னிக், ஹனிமூன் என்றெல்லாம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தோமில்லையா? காருக்கு அது பொறுக்க வில்லை. கம்பெனிக் காராயிற்றே. சொருபத்தைக் காட்டாமல் இருக்குமா?'' என்று சிரித்தான்சபேசன்.

எஞ்சின் பகுதியில் ஏதேதோ மறைகளைத் திருப்புவதும் முடுக்குவதுமாக இருவரும் சிறிது நேரம் போராடிக் கொண்டிருந்தனர்.

கனகா அலுப்புடன் கொட்டாவி விட்டாள். ''இன்னும் ரொம்ப நேரமாகுமா?'' என்று கேட்டாள் பொறுமையை இழந்து.

''சரியாகி விட்டது. சீக்கிரம் போய் விடலாம்'' என்றான் குமரன். பின்பு சபேசனிடம், ''இப்போது ஸ்டார்ட் செய்து பாருங்கள்'' என்றான்.

விசையை இழுத்து இழுத்து எஞ்சினை முடுக்கிவிடச் சபேசன் செய்த முயற்சிகள் வீணாயின. எஞ்சின் அசைந்து கொடுக்க மறுத்தது.

''சரிதான்! பாட்டரியும் பழுதாயிருக்கிறது. தள்ளி விட்டுத்தான் ஸ்டார்ட் செய்ய வேண்டும்போலிருக்கிறது!'' என்றான் சபேசன்.

''பரவாயில்லை. பாதை சற்று இறங்கினாற் போலத்தான் இருக்கிறது. நான் ஒருவனாகவே காரைத் தள்ளுகிறேன்'' என்று கூறினான் குமரன்.

காருக்குப் பின்பக்கமாகச் சென்று ஒரு பக்கத்து ஜன்னல் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு முழுமூச்சுடன் காரைத் தள்ள ஆரம்பித்தான். கார் மெதுவாக நகர ஆரம்பித்தது. அந்த அசைவைப் பயன்படுத்திக் கொண்டு சபேசன் எஞ்சினை முடுக்கிவிட முயற்சி செய்து கொண்டிருந்தான்.

கார் பத்தடி தூரம்கூடப் போயிருக்காது. திடீரென்று குமரனுக்கு ஏதோ பளு குறைந்தது போன்ற உணர்ச்சி. யாரோ மறுபக்கத்திலிருந்து காரைத் தள்ளுவதை உணர்ந்தான். தான் தள்ளுவதை நிறுத்தாமல் ஜன்னல் வழியாக உள் பக்கம் தலையை விட்டு எட்டிப் பார்த்தான். தள்ளுபவரின் கை மட்டும்தான் தெரிந்ததே ஒழிய ஆளைப் பார்க்க முடியவில்லை. ஒரு பெண்ணினுடைய கை என்பது மட்டும் புரிந்தது. தலையைப் பின்னுக்கு இழுத்துக் காரின் பின்புறத்து வழியாகப் பார்க்க முயன்றான். அந்தப் பெண் தலையைக் குனிந்து மூச்சைப் பிடித்துக் கொண்டு காரைத் தள்ளிக் கொண்டிருந்ததால் அவள் முகம் அவனது கண்களுக்குப் புலனாகவில்லை.

சட்டென்று எஞ்சின் இயங்க ஆரம்பித்து விட்டது. அதன் இயக்கத்தைத் தீவிரப்படுத்துவதற்காகப் பலத்த சத்தத்துடன் காரைக் கிளப்பிக் கொண்டு சிறிது வேகமாக முன்னே சென்றான் சபேசன். குமரன் காரிலிருந்து கையை எடுத்துவிட்டுப் பின்தங்கி நின்றான். ஆனால் அந்தப் பெண் மட்டும் காரைப் பிடித்த பிடியை விடாமல் அதன்

போக்கிலேயே சிறிது தூரம் சென்ற பிறகு காரின் வேகம் குறைந்ததும் அதை விட்டுவிட்டு நின்றாள். தட்டா மாலை சுற்றிவிட்டு நின்றவள்போல் நிலை கொள்ளாமல் தள்ளாடியவாறே உரக்கச் சிரிக்க ஆரம்பித்தாள் அந்தப் பெண். அப்போதுதான் அவள் யார் என்று குமரனால் கண்டு கொள்ள முடிந்தது.

''மங்கா! நீ எப்படி இங்கே வந்தாய்?'' என்று கேட்டுக்கொண்டே அவளருகே சென்றான்.

மங்காவும் அப்போதுதான் குமரனைப் பார்த்தாள்.

''ஐயாவா.....? நான் வேறே யாரோ காரைத் தள்ளறாங்கன்னு நினைச்சில்லே வெளையாட்டுக்காச்சும் கூடத் தள்ளினேன்'' என்றாள்.

''நீ விளையாட்டுக்காகத் தள்ளினாலும் உண்மையிலேயே அது எனக்கு உதவியாகத்தான் இருந்தது'' என்று கூறிய குமரன், ''அது சரி, நீ இவ்வளவு தூரம் எதற்காக வந்தாய் என்று சொல்லவில்லையே?'' என்று கேட்டான்.

''இங்கே பக்கத்திலே ஒரு கொய்யாத் தோட்டம் இருக்கிறதைக் கண்டு பிடிச்சு வச்சிருக்கேன். இது கொய்யாப் பழக் காலமாச்சே. பழம் சாப்பிடணும்னு தோணிச்சு. நேரே இங்கே ஓடி வந்தேன். இதோ பாருங்க, எவ்வளவு பறிச்சு வந்திருக்கேன்னு'' என்று கூறி மடி நிறைய பறித்து வைத்திருந்த கொய்யாப் பழங்களைக் காட்டினாள் மங்கா.

''இதிலே பாதி வள்ளிக்கு, பாதி எனக்கு. என்ன இனிப்பு தெரியுமா? நீங்க ஒண்ணு சாப்பிட்டுப் பாருங்க'' என்றாள் மங்கா.

குமரன் சிரித்தான். ''இதுக்கெல்லாம் இப்போது நேரமில்லே. அவர்கள் காத்திருக்கிறார்கள் இல்லையா?'' என்று கார் பக்கம் கையைக் காட்டினான்.

''அடடே, உங்க ஆள்களா அவங்க, எனக்குத்தெரியாதே!'' என்றாள் மங்கா.

''உனக்குத் தெரியாதவங்க இல்லே. பார்த்தால் நீயே புரிந்து கொள்வாய்'' என்று குமரன் கூறிக் கொண்டிருக்கும் போதே, காரைப் பின்னுக்கு ஓட்டிக் கொண்டு வந்து அவர்கள் எதிரே நிறுத்தினான் சபேசன்.

காரில் கனகா உட்கார்ந்திருப்பதைப் பார்த்த மங்கா, ''அடேடே, இந்தம்மாவா? இவங்களுக்கு என்னைக் கண்டாலே புடிக்காதே!'' என்றாள்.

கனகா மங்காவை முறைத்துப் பார்த்தாள்.

''இது யார், கனகா?'' என்று கேட்டான் சபேசன்.

''யாரோ காட்டுமிராண்டிப் பெண்'' என்று கூறிவிட நாவு துடித்தது. அதற்குள் குமரன் குறுக்கிட்டான். ''மங்காவைப் பற்றி அப்புறம் எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். இப்போது நாம் புறப்படலாமே.... மங்கா நீயும் ஏறிக் கொள்'' என்றான்.

''நானுமா?'' என்றாள் மங்கா வியப்புடன் கண்களை உருட்டி விழித்தவாறு.

''நீயும் சேர்ந்து தள்ளியதால் தானே கார் புறப்பட முடிந்தது? ஏறிக் கொள். உன்னை உச்சிக் கடவு வரையில் விட்டு விட்டே நாங்கள் வீட்டுக்குப் போய்க் கொள்கிறோம்'' என்றான் குமரன்.

மங்கா குதூகலத்துடன் சிரித்தாள்.

''இன்னிக்குத்தான் மொதமொதல்லே எனக்குக் கார் சவாரி கிடைச்சிருக்கு!'' என்று கூறிக் கொண்டே காரில் ஏறிப் பின் ஸீட்டில் தொப்பென்று விழுவது போல் உட்கார்ந்தாள்.

குமரனும் ஏறுவதைப் பார்த்ததும், ''என்னங்க சார், நீங்களும் இங்கேயாவா உக்காரப் போறீங்க? எவ்வளவு பெரியவங்க நீங்க. உங்க பக்கத்திலே நான் உக்காந்தா நல்லாவே இருக்காதே'' என்று கூறிக் கொண்டே மறு பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கி விட்டாள்.

''மங்கா! என்ன இது, சும்மா உட்கார்ந்து கொள்!'' என்றான் குமரன்.

''ம்... நான் மாட்டேன். உங்களுக்குச் சரிசமமா நான் உங்க பக்கத்திலே உட்கார்றதாவது?'' என்று கூறிக் கண்டிப்பாக மறுத்து விட்டாள்.

கடைசியில் சபேசனைக் கனகா பக்கமாக நகர்ந்து உட்காரச் சொல்லி விட்டுக் குமரனை டிரைவர் சீட்டில் அமர்ந்து கொண்ட பிறகுதான் மங்கா பின்சீட்டில் உட்காரச் சம்மதித்தாள். அவள் பக்கத்துக் கதவைச் சரியாக அழுத்திச் சாத்திய பிறகு காரைக் கிளப்பிக் கொண்டு புறப்பட்டான் குமரன்.

சற்று நேரம் மௌனமாகக் கார்ச் சவாரியை அநுபவித்துக் கொண்டிருந்த மங்கா சட்டென்று முன் பக்கம் குனிந்து, ''ஏனுங்க, ஐயா யாருங்க? இந்தம்மா பக்கத்திலே இவ்வளவு நெருக்கமா உக்காந்திருக்காரே'' என்றாள் சபேசனைக் காட்டி.

குமரன் சிரித்தான். ''உரிமையோடு தான் உட்கார்ந்திருக்கிறார். வீட்டுக் காரராயிற்றே!'' என்றான்.

''அப்படியா?.... இந்தம்மாளுக்குக் கண்ணாலம் ஆயிடுச்சா? ஏம்மா, எங்களுக்கெல்லாம் சொல்லாமத்தானே கண்

ஞலம் செய்துக்கிட்டீங்க? இருக்கட்டும், இருக்கட்டும்'' என்று கூறிய வாறே பின்னுக்குச் சாய்ந்த மங்கா, மடியிலிருந்து ஒரு கொய்யாப் பழத்தை எடுத்து வெடுக்கென்று கடித்தாள்.

சட்டென்று நினைவுக்கு வந்தவள் போல், ''அடேடே, உங்களுக்கெல்லாம் குடுக்காமே நான் மட்டும் சாப்பிடறேனே! இந்தாங்கம்மா, நீங்களும் சாப்பிடுங்க'' என்று நாலைந்து கொய்யாப் பழங்களை இடது கையால் அள்ளி முன்பக்கம் நீட்டினாள்.

அருவருப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டாள் கனகா.

''பரவாயில்லை மங்கா, நீ சாப்பிடு'' என்றான் குமரன்.

''சரி சரி, இதெல்லாம் நீங்க சாப்பிடுவீங்களா என்ன? எனக்குத்தான் அதிசயம்!'' என்று கூறித் தன் கையிலிருந்த பழத்தைக் கடித்துச் சுவைத்தவாறு பின்னுக்குச் சாய்ந்தாள் மங்கா.

சம்பா நீர்த் தேக்கத்துப் பாதையோடு வேலன்கடவுப் பாதை இணைந்த பிறகு ஒரு கல்லுக்கப்பால் இடப்புறமாக அணைக்கரை வீட்டுக்குப் பிரிந்து செல்லும் பாதை இருந்தது. இயல்பான பழக்கத்தால் குமரன் அந்தப் பாதையில் காரைத் திருப்பிக் கொஞ்ச தூரம் சென்றவுடன் மங்கா, ''சார், சார், காரைக் கொஞ்சம் நிறுத்துங்க. நான் இங்கேயே எறங்கிக்கிடறேன்'' என்று பரபரப்புடன் கூறினாள். அப்போதுதான் குமரனுக்குத் தன் தவறு புரிந்தது.

''பொறு மங்கா! நான் உன்னை முதலில் உச்சிக் கடவுக்குக் கொண்டு விட்ட பிறகே இங்கு வர வேண்டுமென்றிருந்தேன். பாதை திரும்பும் போது அந்த நினைவு இல்லை'' என்றான் காரின் வேகத்தைக் குறைத்தவாறு. பிறகு தொடர்ந்து, ''இப்போது ஒன்றும் குறைந்துவிடவில்லை. ஐந்தே நிமிஷங்களில் உன்னைக் கொண்டு விட்டு விட்டு வந்து விடுகிறேன்'' என்றான்.

''வேண்டாம் சார்! இவ்வளவு தூரத்துக்குக் கார் சவாரி குடுத்தீங்களே, அதுவே போதும். இனிமே நான் நடந்தே போய்க்கிடறேன்'' என்று கூறிக் கொண்டே காரிலிருந்து இறங்கினாள் மங்கா.

'விசித்திரமான பெண்' என்ற சிந்தனைப் புன்னகையுடன் எண்ணியவாறு குமரன் காரை அணைக்கரை வீட்டை நோக்கி ஓட்டிச் சென்றான்.

மங்கா இன்னொரு கொய்யாப் பழத்தை எடுத்துக் கடித்தபடியே உச்சிக் கடவுப் பாதை வழியே நடக்க ஆரம்பித்தாள். சிறிது தூரம்கூடப் போயிருக்க மாட்டாள். இரட்டைக் கிளைப் பாக்கு மரத் திருப்பத்தில் அவள் திரும்பிய போது வள்ளி பரபரப்புடன் ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருப்பதைக் கண்டு வியப்படைந்தாள். மங்காவைக் கண்டதும் வள்ளி ஒரே ஓட்டமாக அவளருகே ஓடி வந்தாள்.

''மங்கா, உன்னை எங்கேயெல்லாம் தேடறேன் தெரியுமா? நல்லவேளை, இங்கேயே கிடைச்சட்டே!''

''என்ன சமாசாரம் வள்ளியக்கா?''

''ஆத்தாவுக்கு மறுபடியும் மயக்கமா வந்திடுச்சாம். வேலைக்கு லீவு போட்டுட்டு வீட்டிலே வந்து படுத்திருக்கு. 'மங்கா எங்கே, மங்கா எங்கே'ன்னு புலம்பிக்கிட்டிருக்கு'' என்றாள் வள்ளி.

''சரியாச் சாப்பிட்டாத்தானே மயக்கம் வராமே இருக்கும். வயத்தைக் கட்டி வாயைக் கட்டி எதுக்குத்தான் பணம் சேர்க்குதோ!'' என்று கூறிய மங்கா, ''சரி வா, போகலாம்!'' என்று கொய்யாப் பழத்தைக் கடித்துச் சுவைத்துக் கொண்டே வள்ளியுடன் நடந்தாள்.

ஃ ஃ ஃ

**மா**யாண்டியை ஒரு விதத்தில் முதிர்ந்த தத்துவ ஞானி என்றுதான்



''ஏனப்பா! ஊரிலிருந்து வந்த உன் மருமகள், 'இந்தப் பட்சணங்களை யெல்லாம் யார் செய்தது?' என்று கேட்டால், நீங்கள் செய்ததாகச் சொல்லட்டுமா? இல்லே; நான்தான் செய்தேன் என்று சொல்லி விடட்டுமா?''

சொல்ல வேண்டும். எந்த அவமானத்தையும் வாய் திறவாமல் தாங்கிக் கொள்ளும் சகிப்புத் தன்மை அவனிடம் இருந்ததல்லவா? இல்லாவிட்டால் எந்த நிமிஷமும் இந்த உலகம் அவனைக் கீழே தள்ளித் துவைக்கத் தயாராயிருந்தும் அதைச் சிறிதும் பாராட்டாமல், முக மலர்ச்சியுடன் தன் வேலைகளைச் செய்து கொண்டிருக்க அவனால் முடியுமா?

மாயாண்டியை அவ்வளவு தூரத்துக்குத் தத்துவஞானியாக்கிய பெருமை அவனுடைய அருமை மனைவி அங்காயியைத்தான் சேர வேண்டும். குளவி கொட்டிக் கொட்டியே புழுவையும் குளவியாக்கிவிடும் என்று சொல்வார்கள். இதற்கு நேர்மாறாக அங்காயி கொட்டிய கொட்டலில் மனிதனாயிருந்த மாயாண்டி புழுவுக்கும் கேவலமான நிலைக்கு மாறியிருந்தான். புழுகூட எப்போதாவது ஒரு திரும்புத் திரும்பித் தாக்க முயற்சி செய்யுமாம். ஆனால் அந்த அளவு தன்மானத்தைக்கூட மாயாண்டியிடம் மிச்சம் வைக்காமல் கொட்டித் துரத்தியிருந்தாள் அங்காயி.

இத்தனைக்கும் அங்காயி தன்னுடைய ஆடம்பரச் செலவுகளுக்கெல்லாம் மாயாண்டியின் சம்பாத்தியத்தையே எதிர்பார்த்திருந்தாள். அவளையொத்த மற்றப் பெண்களெல்லாம் ஏதாவது வேலை செய்து ஒரு நாளைக்கு ஒன்றோ இரண்டோ சம்பாதிக்காமல் இருப்பதில்லை. ஆனால் அங்காயி, நாக்குக்காரி, மேனி மினுக்கித் திரிவதற்குத்தான் அவளுக்குப் பொழுது சரியாக இருக்கும்.

ஒவ்வொரு நாளும் மாயாண்டியைக் காயக் காய வேலைக்குத் துரத்திவிட்டுத் தலைசீவிக் கொண்டை போட்டுக் கொள்வதற்காக ஒரு மணி நேரம் செலவழிப்பாள். முகத்துக்குப் பவுடரும் கொண்டைக்குப் பூவும் இல்லாமல் அவளுக்குச் சரிப்படாது. இப்படியெல்லாம் சிங்காரம் செய்து கொண்ட பிறகு நாயர் டீக்கடைக்குப் போய் ஒரு புரை ரொட்டியோ, பன்னோ, டீயுடன் சாப்பிட்டுவிட்டு அங்கேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்து அங்கு சாப்பிட வரும் தொழிலாளிகளிடம் வாய் ஓயாமல் அரட்டையடித்துக் கொண்டிருப்பாள்.

தனக்கு எழுதப் படிக்கத் தெரியும் என்பதைப்பற்றி அங்காயிக்கு ரொம்பப் பெருமை. அதனாலேயே மற்றப் பெண்களைப் போல் சிற்றாள் வேலை செய்வதை அவள் இழிவாகக் கருதி வந்தாள். வீட்டில் விழுந்து கிடக்கும் நேரங்களில் தினப் பத்திரிகை எதையாவது வைத்துக் கொண்டு எழுத்துக் கூட்டிக் கூட்டிப் படித்து அக்கப்போருக்குரிய விஷயங்கள் ஒன்று பாக்கி விடாமல் மண்டையில் ஏற்றிக் கொள்வாள். அந்த அறிவுக் களஞ்சியத்தை அவள் அள்ளி வீசும் போது அவளைத் தட்டிப் பேச யாருக்கு வாய் இருக்கும்? வாயில் ஈ புகுந்ததுகூடத் தெரியாமல் அண்ணாந்த நிலையில் அவளுடைய சாமர்த்தியத்தை வியந்து கொண்டு உட்கார்ந்திருப்பார்கள்.

அடுப்புப் பற்ற வைத்து ஆக்கிப் போடுவதென்ற வேதனையை அங்காயி ஆடிக்கொரு தரம் ஆனிக்கொருதரம் என்றுதான் வைத்துக் கொள்வாள். சாப்பாட்டைப் பற்றி அவள் அதிகமாக அலட்டிக் கொள்ளவில்லை. நாயர் கடையில் கணக்கு வைத்துக் கொண்டு காய்ந்ததோ கருகலோ அங்கு எது கிடைத்தாலும் அதை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு இருந்துவிடுவாள். மாயாண்டிக்கும் அதே கதைதான். வீட்டுக்கு வந்தால் சாப்பாடு கிடைக்கும் என்ற நம்பிக்கை அவனுக்கு என்றுமே கிடையாது. வேலையிலிருந்து திரும்பி வரும் வழியிலேயே நாயர் கடையில் கடனுக்கென்று ஏதாவது வாங்கித் தின்றுவிட்டுத்தான் வீட்டுக்கு வருவான். அவன் வந்து விட்டால் அங்காயிக்குப்

---

தனி மனிதன் எடுத்தால் பிச்சை ;
அரசாங்கம் எடுத்தால் அன்னிய உதவி !
தனி மனிதன் கொடுத்தால் லஞ்சம் ;
தேர்தல் அபேட்சகர் கொடுத்தால் அன்பளிப்பு !
தனி மனிதன் பெற்றால் லஞ்சம் ;
ஆளும் கட்சி பெற்றால் தேர்தல் நிதி !
தனி மனிதன் செய்வதற்குப் பெயர் 'ஜேப்படி' (பிக்பாக்கெட்)
அதையே அரசாங்கம் செய்தால் பெயர் ''மறைமுகவரி!''
தனிமனிதன் 'மஞ்சள்கடுதாசி' கொடுத்தால் 'இன்சால்வன்ட்'
ஆனால் அரசாங்கம் கொடுத்தால் ''நாணய மதிப்புக் குறைப்பு!''
— ''ஒரு மனிதன்''

'சோஷலிஸ' இலக்கணம்

# 'ஸிந்தாலைப் பற்றிய சிகரமான சிறப்பு அதிலுள்ள ஜி-11 ஹெக்ஸாக்ளோரோபீன் என்கிறார்கள்




## நான் அதை வாங்கக் காரணமோ அதன் நறுமணமே'

"உம்ம்...இணைபிரியா-திருக்கும் அதன் இன்ப நறுமணம்...எப்படித்தான் மெச்சுவேனோ...ஸிந்தால் ஸ்நானத்திற்குப் பிறகுதான் எத்தகைய மலர்ச்சி"




அழுக்கு, வியர்வை ஆகிய வற்றால் உண்டாகும் கிருமிகளை அழிக்கிறது ஸிந்தாலில் உள்ள ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்). உங்கள் உடம்பிலே நாற்றம் என்பதே எழாமல் பாதுகாக்கிறது.




இருமடங்கு உறுதிபெறுவீர்—நாள் முழுதும் மலர்ச்சி பெறுவதற்கான ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்) அடங்கிய ஸிந்தால் சோப்பும், ஸிந்தால் டாய்லெட் பவுடரையும் உபயோகியுங்கள்.

ஜி-11 என்பது எல். ஜிவோடான் ஏ.ஸி., எஸ்.ஏ. அவர்களின் ட்ரேட் மார்க்கு

INTERPUB/GC52 TM

பொழுது போவதைப் பற்றிக் கவலே இருக்காது. ஒன்று மாற்றி ஒன்று அவன் மீது ஏதாவது குற்றப் பத்திரிகை படித்துக் குறை நேரமும் கொட்டிக் கொட்டியே தீர்த்து விடுவாள்.

இப்படியே நாயர் விதித்த விதி யென்று எதையாவது சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொள்வதற்கும் எல்லே உண்டல்லவா ? நாக்கு என்னும் அசுரன் சில சமயம் அங்காயியைப் படாத பாடுபடுத்தி வைத்துவிடுவான். அப்போது அவளுடைய சோம்பேறித் தனமெல்லாம் போன இடம் தெரியாமல் பறந்து போய் விடும். வட்டியும் முதலுமாக வாய்க்கு ருசியான பண்டங்களைச் செய்து நாள் முழுவதும் சாப்பிட்டுக் கொண்டேயிருப்பாள். மாயாண்டிக்கும் அவ்வப்போது ஏதாவது கொஞ்சம் கிடைத்துக் கொண்டிருக்கும்.

அந்த மாதிரி வெறிதான் அன்று அங்காயியை ஆட்டிக் கொண்டிருந்தது போலும். காலையிலேயே 'கமகம' என்ற வாசனை வீட்டில் நிரம்பியிருந்தது. அங்காயி அடுப்படியில் உட்கார்ந்து தோசை சுட்டுக் கொண்டிருந்தாள். அங்காயி அடுப்படிக்குப் போவதுதான் அபூர்வமே ஒழிய, போய் விட்டால் ஒவ்வொன்றும் வயணமாகத்தான் தயார் செய்வாள். அதைப் பற்றி மாயாண்டிக்கு ஒரே பெருமை. அவனுக்காக வென்று வட்டிலில் போட்டிருந்த இரண்டு குட்டித் தோசைகளைச் சாப்பிட்டுக் கொண்டே அவன் கூறினன்.

''இதில்லே, தோசை.... நாயர் கடைத் தோசையும் ஒரு தோசையா?''

''ஆமாம், ஆக்கிப்போடறவ ஆக்கிப் போட்டா துன்ற ஆளுக்குத் தொக்குத் தான்'' என்ருள் அங்காயி. அவளுக்குப் பூர்வீகம் சென்னையை அடுத்த வில்லிவாக்கம். தான் மதராஸ்காரி என்று சொல்லிக் கொள்வதில் அவளுக்கு ஒரு பெருமை.

குட்டித் தோசையின் கடைசி விள்ளலே வாயில் போட்டுச் சுவைத்துக் கொண்டே மாயாண்டி கூறினன். ''இவ்வளவு நல்லா ஆக்கிப் போடறியே, நாயர் கடையிலே துன்னு துன்னு ஏன் சாவணும்?'' என்ருன். மாயாண்டி மதுரைக்காரனுயிருந்தாலும் மனைவியிடம் பேசும்போது அவளுடைய கொச்சையைத்தான் கையாள முயலுவான். அப்படியாவது அந்த லங்கிணியின் நல்ல எண்ணத்தைச் சம்பாதிக்க முடியுமா என்ற நப்பாசைதான், வேறென்ன?

''நெதமுமே நீ ஆக்கிப் போட்டா எவ்வளவு நல்லாருக்கும், ஏன் அங்கி?''

''அங்கியுமாச்சு, சொக்காயுமாச்சு. உனக்கு ஆக்கிப் போட அடிமை ஓலே எழுதி வந்திருக்கயா என்ன? போனுப் போகுதுன்னு நான் துன்றதிலே ஏதோ குடுத்தா, ஆக்கிப் போடணுமாம் ஆக்கி! ஆசையைப் பாரு. போய்யா, போய்யா. உனக்குக் கொடுப்பனே இருக்கறதுதானய்யா உனக்குக் கிடைக்கும்'' என்று முகத்தில் இடிக்காத குறையாக அங்காயி சட்டுவத்தை ஆட்டி ஆட்டித் தன் சொல்லம்புகளைத் தொடுக்கவே, மாயாண்டி வாலேக் குழைத்துக்கொண்டு மெதுவாக எழுந்து வெளியே செல்ல ஆரம்பித்தான்.

''இந்தாய்யா, இந்தக் காப்பித் தண்ணியையும் கொட்டிக்கினு நடய்யா'' என்று ஓர் அலுமினிய டம்ளரை அதிலிருந்த காப்பித் தண்ணியில் பாதி சிதறித் தெறிக்கும்படியாக ''ணங்'' என்று வைத்தாள் அங்காயி.

மறு பேச்சில்லாமல் அதைக் குடித்தான் மாயாண்டி. **(தொடரும்)**




சமீபத்தில் மேற்கு ஜெர்மனியில் முன்ஸ்டர் நகரில் நடைபெற்ற சர்வதேச மருத்துவக் கருத்தரங்கில் இடம் பெற்றிருந்த ஒரு புதுமையான நாற்காலி, 27 நாடுகளைச் சேர்ந்த மருத்துவ நிபுணர்களை வியப்பில் ஆழ்த்திவிட்டது. ஏனெனில் இந்த நாற்காலி, 'போ' என்ருல் போகும்; 'நில்' என்ருல் நிற்கும். குரலினுல் இயங்கும் நாற்காலி இது! பாரிச வாயு அல்லது காயங்களின் காரணமாக நடக்க முடியாதவர்கள் இந்த நகரும் நாற்காலிகளில் அமர்ந்து உத்தரவிட்டால், அவரது குரலுக்கு ஏற்ப நாற்காலி இயங்கும்! (யூ. பி. எஸ்.)

## 30. திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

குறிப்பறிந்து ஒழுகுதல் ஒரு சிறந்த குணம்.

“குறிப்பில் குறிப்புணர்வாரை
உறுப்பினுள்
யாதுகொடுத்துங் கொளல்”

என்பது பொதுமறை. திருத்தொண்டர்களது திருக் குறிப்பறிந்து ஒழுகுவதில் வல்லவரான நாயனார் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் என்னும் திருப்பேர் பெற்றார்.

எல்லா வளங்களும் பொருந்திய தொண்டை நன்னாட்டின் தலைநகரம் காஞ்சிமாநகரம். உமாதேவியார் உயிர்களிடத்துப் பெருங் கருணையினால் முப்



# சிவனருட் செல்வர்

திருமுருக கிருபானந்த வாரியார்

பத்திரண்டு அறங்களைப் புரிந்து கொண்டே காமகோட்டத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமையுடையது. இது ஐம்பெரும் பூதங்களுள் பிருதிவித் தலம். முத்தித் தலம் ஏழினுள் முதன்மை பெற்றது. இத்தகைய சிறப்பு வாய்ந்த முத்தி நகரமாகிய காஞ்சிபுரத்தில் ஒரு புறத்தில் வாழ்பவர் திருக்குறிப்புத் தொண்ட நாயனார். அவர் ஏகாலியர் குலத்தில் அவதரித்தவர். செம்மையுடைய அன்பு நிறைந்த மனத்தினர். சிவநெறி நின்ற சீலம் மிக்கவர். புண்ணிய உருவங்களாகிய திருத்தொண்டர்களது குறிப்பறிந்து தொண்டு செய்யும் தன்மையில் திண்மையுடையவராக இவர் ஒழுகியபடியால் “திருக்குறிப்புத் தொண்டர்” என்னும் திருநாமம் பெற்றார்.

தேரொலியும் மாவொலியும் மிகுந்து திசைகள் எங்கும் இசை பரவிய திருக்கச்சியம்பதியில் பொதுவாக ஊரவர்க்கு ஆடைகளை ஒதுக்கித் தரும் பொது வண்ணார் என்று இவரைக் கூறலாகாது. திங்களையும் கங்கையையும் முடித்த சிவபெருமானுடைய திருத்தொண்டர்களுக்கு ஆடைகளைக் குறிப்பறிந்து ஒலித்துக் கொடுக்கும் சிறப்புடையவர். இவர் தொண்டர்களது ஆடைகளின் அழுக்கை யகற்றுவார் போல் இருவினையும், மும்மலமும் இறப்பு, பிறப்பு ஆகிய அழுக்கையும் அகற்றினார். திருக்குறிப்புத் தொண்டருடைய தன்மையைக் கண்டு அருள் புரியத் திருவுளங் கொண்டார் எம்பெருமான்.

பற்கள் கிடுகிடுக்கும் குளிர் மிகுந்த காலம். அந்தக் காலத்தில் சிவபெருமான் வறியவர் போல் அழுக்கடைந்த கந்தை யுடுத்தி, மாதவ வேடம் பணைந்து மாலறியா மலரடிகள் மண் மேல் படத் திருத் தொண்டர்பால் வந்தருளினார். உடம்பு முழுதும்

வெண்ணீறு ஒளி செய்ய, கருமேகம் மூடியது போல் அழுக்குக் கந்தையுடன் எழுந்தருளி வரும் அருந்தவரைத் திருக் குறிப்புத் தொண்ட நாயனார் கண்டார். அக் கோலம் நாயனாருக்குத் துன்பத்தைத் தந்தது; உள்ளம் உருகியது. அடியவர் எதிர் சென்று திருவடிகளில் வீழ்ந்து பணிந்து எழுந்தார்.



''எந்தையே! தேவரீர் இங்கு எழுந்தருளுவதற்கு அடியேன் செய்த தவமோ? என் குலம் செய்த தவமோ? என் முன்னோர் புரிந்த முடிவிலாத் தவமோ? நானே தவமுடையேன்; உய்ந்தேன். பிறவிப் பெருங் கடலினின்றும் கரையேறினேன். சிவானந்தப் பெருவாழ்வு பெற்றேன். தவப் பெருங் குன்றே, திருமேனி இளைக்கின்றீர். திருமுகம் வாடியுள்ளது. காரணம் யாதோ? கந்தையினைத் தந்தருளும்; வெளுத்துத் தருகின்றேன்'' என்றார் திருக் குறிப்புத் தொண்டர்.

''அன்பனே! இந்தக் கந்தை மிகவும் அழுக்கேறி உடுத்திக் கொள்ள முடியாத நிலையில் இருக்கிறது. ஆனால் குளிர் கொடுமையால் இதை விட முடியவில்லை. மேற் கடலில் சூரியன் விழுமுன் இதனை வெளுத்துக் காய வைத்துக் கொடுப்பதாயின் கொண்டு போய்த் துவைத்து வாரும்'' என்று அருளிச் செய்தார் இறைவர்.

''பெருமானே! கந்தையை என்னிடம் தந்தருளும். அவ்வண்ணமே பொழுது போவதற்குள் இதனை உலர வைத்துத் தருகிறேன்'' என்றார் தொண்டனார். ''அவ்வாறு தராமற் போவீராயின் இந்த உடம்புக்கு இடர் செய்தவராவீர்'' என்று கூறிக் கந்தையைத் தந்தருளினார்.

திருக் குறிப்புத் தொண்டர் கந்தையைப் பெற்றுக் கொண்டு போய் நறுமணம் வீசும் மலர்கள் நிறைந்த ஒரு குளத்தில் தோய்த்தார். பின்னர் அதைப் புழுங்க வைத்தார். மீண்டும் தோய்க்க முயலும் போது பெரும் பகல் கழிந்தது. பிற்பகலில் கங்கை முடித்த கண்ணுதற் பெருமானது கருணை



யால் கரு மேகங்கள் சூழ்ந்து பெரு மழை விடாது பெய்தது. திசை மயங்கியது; மழைத் தாரையானது விழி நுழையாதபடி நெருங்கிப் பெய்தது. தொண்டனார் மிகவும் மனம் கலங்கினார். மாதவரிடம் கூறிய வாக்குறுதியை நினைந்து உள்ளம் உடைந்த தொண்டனார் என்செய்வேன்? துவைத்து உலர்த்தித் தருவதாக இந்தக் கந்தையைப் பெற்றேனே? தேவ தேவா! கருணைகரா! செய்வதறியேன்'' என்று வாடினார். மழை ஒருவேளை விட்டொழியும் என்று கருதினார். ஆனால் மழை நிற்பதாகக் காணவில்லை. பகைவரைப் போல் இரவு வந்துவிட்டது.

தொண்டனார் மிக மிக வருந்தினார். ''ஆ! கெட்டேன். குளிரால் உடல் வருந்தும் தூய தவ முனிவரிடத்தில், என் குற்றேவல் தவறி விட்டதே'' என்று மயங்கி வீழ்ந்தார். மீண்டும் எழுந்தார். மழை பொழிந்த வண்ணமாகவே யிருந்தது. மாதவர் பால் ஓதிய கால எல்லை கடந்தது. ''ஆ! சிறியேன் இப்படி நிகழும் என்று அறியேன். முன்னமேயே துணியைத் துவைத்து வீட்டில் கொண்டு போய்க் காற்றில் உலர்த்தாமல் போனேன். சிறந்த தவ முனிவரது திருமேனி குளிரால் துன்புறுமாறு ஈங்கு இழைத்த எனக்கு இனி வேறு என்ன செயல் இருக்கிறது? காலந் தவறிய நான் செய்யத் தக்கது இதுவே'' என்று துணி துவைக்கும் கல்லில் வேகமாகத் தமது தலையை மோதினார். இவ்வாறு அவர் உயிர்விடத் துணிந்தது தற்கொலையாகாதோ என்று கேட்கலாம். திருத்தொண்டின் நியதிக்கு ஊறு வந்த பின் பெரியோர் உயிர் வாழ்க்கையை விரும்ப மாட்டார்கள். ஆகவே, திருக்குறிப்புத் தொண்டர் பாறையில் மோதி உயிர் விடத் துணிந்தது தற்கொலையாகாது. திருக்குறிப்புத் தொண்டர் தலையைப் புடைக்கப் புகுந்தபோது பாறைக்கு அருகில் இறைவருடைய திருக்கரம் தோன்றி அவருடைய தலையைத் தகைந்து கொண்டது.

நீர்மழை மாறி மலர் மழை பொழிந்தது வானம். தழுவக் குழைந்த தயாபரன் உண்மையான அன்புடைய நாயனாருக்கு வெண்மையான விடையின் மீது உமையம்மையாருடன் காட்சி தந்தருளினார். மாலும் அயனும் காணா மாதேவனைப் பாலும் தேனும் போல் கண்டு, உள்ளம் உருகி, அன்பு வெள்ளம் கரை புரளக் கைகூப்பி, தொழுது நின்றார். முக்கட் பெருமான் அன்பரை நோக்கி, ''உனது அன்பின் திறத்தை மூவுலகங்கட்கும் அறிவித்தோம். நீ சிவலோகத்தில் நம்முடன் பிரியாது இருந்து இன்புறுவாய்'' என்று அருள் புரிந்து மறைந்தார். திருக் குறிப்புத் தொண்ட நாயனார் தூய சிவானந்தப் பெருவாழ்வை எய்தினார். (தொடரும்)




நருபா ஒருவர், பல துறையில் உள்ளவர்களைச் சந்தித்து ''வாழ்க்கை''க்கு விளக்கம் கோரினார். இதோ அவர்கள் கூறிய விளக்கங்களைப் பாருங்கள்!

கணக்கு ஆசிரியர்: ''சந்தோஷத்தைப் பெருக்கி, கவலையைக் கழிக்கவும். இதுதான் வாழ்க்கையின் கணக்கு.''

ரிக்ஷா இழுப்பவர்: ''வாழ்க்கை ரிக்ஷா வண்டியைப் போன்றது. மனைவி, மக்கள் நிம்மதியாக உட்கார்ந்திருக்க அதைக் கணவன் இழுத்துச் செல்கிறான்.''

ஹோட்டல்காரர்: ''வாழ்க்கை ஹோட்டல் சாப்பாடு போன்றது. வீட்டில் சாப்பிடுபவர்கள் ஹோட்டல் சாப்பாட்டுக்காரனையும் ஹோட்டல் சாப்பாட்டுக்காரன் வீட்டுச் சாப்பாட்டுக்காரனையும் பார்த்து பொறாமையடைவது போல், திருமணமானவன் பிரம்மச்சாரியைப் பார்த்தும், பிரம்மச்சாரி மணமானவனைப் பார்த்தும் பெருமூச்சு விடுகின்றனர்.''

அரசியல்வாதி: ''வாழ்க்கை சட்டசபையைப் போன்றது. அதில் கணவன் ஆளும் கட்சி. மனைவி எதிர்க் கட்சி. மாமியார் சபாநாயகர்.''

லாரி டிரைவர்: ''வாழ்க்கை மவுண்ட்ரோடைப் போன்றதல்ல. கிராமப்புற ரோடுகளைப் போல் 'குண்டும் குழியும்' நிறைந்த பாதை.''

என். ஜி. ஓ.: ''வாழ்க்கை பஞ்சப்படி போன்றது. பஞ்சப்படிக்கு எவ்வளவு போராட்டம் நடத்த வேண்டியுள்ளதோ, அதைவிடப் பெரும் போராட்டம் வாழ்க்கை.'' — வி. சம்பத்குமார்

# பெரிதோ சிறிதோ—
# தரமே
# எமது குறிக்கோள்.



MAC / MC-F-15/, TAM

நம் நாட்டின் உணவு உற்பத்தியைப் பெருக்க டிராக்டர்களும் ஸ்டேஷனரி டீசல் என்ஜின்களும் பெரும் உதவி செய்கின்றன

இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் டீசல் என்ஜின்களின் தனித் தனி தேவைகளுக்கேற்ப மைகோ ப்யூவல் இஞ்செக்ஷன் பம்புகளைத் தயாரிக்கின்றது.

மைகோ எக்விப்மெண்ட் மிகமிக நுட்பமாகத் தயாரிக்கப்பட்டு, தரத்திற்கும் நம்பகத்திற்கும் கடுமையாக சோதிக்கப்பட்டவை. அசல் மைகோ எக்விப்மெண்ட் உபயோகித்து விவசாயத்தை லாபகரமாகச் செய்யுங்கள்.

## விவசாயம் செழிக்க
## மைகோ சேவை செய்கிறது.

# MICO

LICENCE **BOSCH**



## மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கோ., லிட்.
## பெங்களூர்

கிளை நிலையங்கள் :—

பம்பாய்-18 (WB) : 79, டாக்டர் அன்னிபெஸண்ட் ரோடு,
வொர்லி

கல்கத்தா-16 — 91A, பார்க் ஸ்ட்ரீட்

மதராஸ்-2 — 1/155 மவுண்ட் ரோட்,

புதுடெல்லி-1 — காஷ்மீரபாத் என்ஜினீரிங் கோ.,
29A/1 ஆஸப் அலி ரோடு

## அலுவல் முடிந்து 'அப்பாடா' என்று இருக்கும் நேரம்

உங்கள் குடும்பத்தார், பரிவோடும் பாசத்தோடும் உங்களைச் சூழ்ந்து உட்கார்ந்திருக்கின்றனர்.

அவர்கள் கண்களில் நம்பிக்கையின் நல்லொளி சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. காரணம்? தேவையானதைச் செய்யத் தவறாதவர் நீங்கள் என்பது அவர்களுக்குத் தெரியும்.

உங்கள் அன்பு, ஆதரவு, தியாகம் ஆகியவைதான் அவர்கள் காணும் ஆசைக் கனவுகளை நனவுகளாக்கும்.

வருங்காலம்—அதை நம்புபவர் நீங்கள். தன்னம்பிக்கை உங்களுடைய தனிச் சொத்து. ஆயுள் இன்சூரன்சிலும் அசையா நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். எனவேதான், நீங்கள் எடுத்துள்ள என்டௌமெண்ட் பாலிசி உங்களையும் உங்களைச் சார்ந்தோரையும் எதுநேரினும் காப்பாற்றும் என்பதை நன்கு அறிந்திருக்கிறீர்கள்.



## ஆயுள் இன்சூரன்சு போல

ஆதரவு தருவது எதுவுமே இல்லை



# பகைமை பூண்ட நட்பு

ஷமுவேல் யூசப் அக்னன்

'பகைவனுக்கு அருள்வாய் நன்னெஞ்சே!' மகாகவி பாரதியின் பாவுக்கு விளக்கம் தருவதுபோல் அமைந்திருக்கும் இந்தக் கதையை எழுதியவர் இலக்கியத்துக்கான நோபல் பரிசை இவ்வாண்டில் பெற்றுள்ள இஸ்ரேயில் தேசத்து எழுத்தாளர். அவரது இந்தச் சிறு கதையை மகிழ்ச்சியுடன் இங்கு பிரசுரிக்கிறோம்.

வாயு மண்டலம் நிர்மாணிக்கப்படுவதற்கு முன்னால் காற்றுகளுக்கெல்லாம் அதிபதியான வாயு பகவானின் ஆட்சி எத்திசையிலும் ஓங்கியிருந்தது. அவனது அமைச்சர்களும் அலுவலர்களும் தங்கள் அணி படைகளுடன் அவனுடனேயே வாழ்ந்து வந்தனர். அரசனைப் போலவே அவர்களும் பலம் பொருந்தியவர்கள். அடம் பிடித்தவர்கள்; அவனைப் போலவே காற்றுருவம் படைத்தவர்கள். மலைகளிலும் வீசுவார்கள்; பள்ளத்தாக்குகளிலும் ஆட்சி செலுத்துவார்கள். குன்றுகளையும், மலைச் சந்துகளையும் பொந்துகளையும்கூட அவர்கள் விட்டு வைப்பதில்லை. நிலமகளே தங்களுக்கு மான்யமாகக் கிடைத்து விட்டது போன்ற இறுமாப்பில் தங்கள் மனம் போன போக்குப்படியெல்லாம் செயல்பட்டு வந்தார்கள்.

நான் ஒரு முறை அந்தப் பக்கம் சென்றிருந்தேன். ஆகா, என்ன மனோரம்யமான இடம் அது! குளு குளுவென்ற காற்று! தூய்மையான நீல வானம். திறந்தவெளி. சுதந்திரமான சூழ்நிலை. மகிழ்ச்சி நிலை கொள்ளாமல் நான் அப்பகுதியில் சுற்றிச் சுற்றி வந்தேன். ஒரு காற்று என்னை அணுகிக் கேட்டது: ''இங்கே நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''உலவிக் கொண்டிருக்கிறேன்'' என்று பதிலிறுத்தேன் நான்.

''உலவிக் கொண்டிருக்கிறாயா?'' என்று ஏகத்தாளமாகக் கேட்டு அது என் தலையைத் தட்டியது. தலையிலிருந்த தொப்பி பறந்து கீழே விழுந்தது. அதை எடுக்க நான் குனிந்தேன். காற்று என் கோட்டைப் பற்றிப் பறபறவென்று இழுத்துத் தலை வழியே சுழற்றி எறிய முயன்றது. அதற்கு முதற்படியாகத் தலையிலே துணியைப் போட்டு என்னை அசடாக்கியது. நான் என் கோட்டைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பழையபடி அணிந்து கொள்ளலானேன். அதைக்



கன்னுற்றதும், அது மீண்டும் என்னிடம் வந்து பூமியைக் கவ்வும்படியாக என்னைப் பிடித்துத் தள்ளிவிட்டது. நான் விழுந்ததைக் கண்டு கடகடவென்று கெக்கெலி கொட்டியும் நகைத்தது. நான் மெதுவாகக் காலூன்றி எழுந்து நிற்க முயன்றேன். என் மீது ஏறிப் பாய்ந்து, ''போ, உன் வழியே! வராதே இங்கே!'' என்று கடிந்தது.

நம்மைக் காட்டிலும் பலவானை எதிர்த்து நிற்பதில் அர்த்தமில்லை என்று கண்ட நான் பேசாமல் என் வழியே சென்றேன்.

நான் நகரத்தை அடைந்தேன். வீட்டில் புகுந்தேன். நிம்மதி காண முடியாமற் போகவே, மீண்டும் வீட்டை விட்டுப் புறப்பட்டேன். நான் விரும்பியோ விரும்பாமலோ என் கால்கள் என்னை வாயு மண்டலத்துக்கே இட்டுச் சென்றன. காற்று முன்பு கொடுத்த உபத்திரவங்கள் எல்லாம் எனக்கு



ஷமுவேல் யூசப் அக்னன்

நன்றாக நினைவிருந்தன. எனவே, முன்னேற்பாடாகக் கித்தான்களும், முளைகளும் கையோடு எடுத்துச் சென்றேன். முளைகளை அடித்து ஒரு கூடாரம் சமைத்தேன், காற்று—புயலில் தஞ்சம் அளிக்கும் என்பதற்காக.

ஓர் இரவுதான் அங்கே தங்கினேன். ஏற்றி வைத்திருந்த விளக்கு சட்டென்று அணைந்து விட்டது. என் விளக்கை அணைத்தது யார் என்று பார்ப்பதற்காக நான் கூடாரத்தை விட்டு வெளியே வந்தேன். வெளியே காற்று நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன். 'என்ன வேண்டும்?' என்று கேட்டேன். அது என் காதுகளைப் பொத்தி வாயில் அறைந்தது. நான் பேசாமல் கூடாரத்துக்குத் திரும்பினேன். அது கூடாரத்தின் முளைகளைப் பிடுங்கியது. கயிறுகளை அறுத்தது. கூடாரத்தைத் தலை குப்புறப் புரட்டியது. கித்தான்களைக் கந்தல் கந்தலாகக் கிழித்துப் போட்டது. கடைசியாக என்மீதே பாய்ந்து என்னைப் புரட்டி எடுக்கலாயிற்று.

அதன் பலத்துக்கு ஈடு கொடுத்து நாம் நிற்க முடியாது என்பதைக் கண்டேன். எப்படியோ மெதுவாகத் தடுமாறி எழுந்து நின்று நான் மீண்டும் நகரத்தை அடைந்தேன்.

ஆம், நகரத்தை அடைந்தேன். அதன் சுற்றுச் சுவருக்குள் அடைந்து கிடக்க முயன்றேன். ஆனால் எனக்கு நிம்மதி கிட்டவில்லை. ஏதாவது காற்றோட்டமான இதம் தரும் இடத்துக்குப் போக வேண்டும் என்ற ஆசை தலை தூக்கியது. வாயு மண்டலத்தில் கண்ட காற்றைப் போல் எங்குமே காணக் கிடைக்காததால், நான் மீண்டும் அந்த இடத்துக்கே நடையைக் கட்டினேன்.

காற்றின் அவமதிப்புக்கு ஆளாகக் கூடாதென்பதற்காக நான் கையோடு பலகைகளை எடுத்துச் சென்று சிறு குடிசை ஒன்றை அமைத்துக் கொண்டேன். நிம்மதிக்கு ஓர் இடம் கிடைத்து விட்டது என்று நான் மகிழ்ந்திருந்த வேளையிலே காற்று வேறு விதமாக எண்ணி விட்டது. ஒரு நாள்பொழுது போவதே பிரம்மப் பிரயத்தனமாகிவிட்டது. காற்று கூரையைக் குத்திற்று. சுவர்களை ஆட்டி அசைத்தது. ஓர் இரவுக்குள் குடிசை முழுவதையுமே பெயர்த்து விட்டது.

ஆம், காற்று என் குடிசையையே பெயர்த்தெடுத்துக் கொண்டு போய்விட்டது. எனக்குத் தங்குமிடம் இல்லாமல் செய்துவிட்டது. நானும் தப்பினோம் பிழைத்தோம் என்று திரும்பவும் நகரத்தை அடைந்தேன்.

ஒரு முறை நடந்ததுவே இரண்டாம் முறையும் நடந்தது. இரண்டாம் முறை நடந்ததுவே மூன்றும் முறையும் நடந்தது. நான் நகரத்துக்குத் திரும்பினேனே ஒழிய மனத்துக்கு அமைதி மட்டும் கிட்டவில்லை. திரும்பத் திரும்ப எந்த இடம் என்னை விரட்டி விரட்டி அடித்ததோ, அதே இடத்தை எண்ணி எண்ணி என் இதயம் ஏங்கியது. 'எந்த இடம் உன்னை இப்படித் திருப்பித் திருப்பி அடிக்கிறதோ, அந்த இடத்துக்குத் திரும்புவது முடியாத காரியம் என்று உனக்குத் தோன்றவில்லையா? முடியாத காரியம் எப்பொழுதுமே முடியாத காரியம்தான். ஏங்கிச் சாகாதே!' என்று இருதயத்துக்கு ஆறுதல் அளித்தேன். ஆனால் என் இதயம் முற்றிலும் எனக்கு மாறாகவே நினைத்தது. நான் ஆயிரம் முறை முடியாத காரியம் என்று அடித்துச் சொன்னால், அது ஆயிரத்தொரு முறை 'முடிந்த காரியம், முடியாத காரியம் என்று ஒன்றும் இல்லை. மனம் வைத்தால் ஆகாத காரியம் என்று ஒன்று உண்டா?' என்று எனக்கு மறுமொழி அளித்து வந்தது.

நான் மரங்களையும் கருங்கற்களையும் எடுத்துச் சென்றேன். தானே வீடும் கட்டி முடித்தேன்.

நான் என் வீட்டைப் பற்றிப் பெருமை பாராட்டிக் கொள்ளவில்லை. அது சின்னஞ்

# வெள்ளை வெளேரென சலவை!



# ஸில்வர் சீப்ஸ்

துணிகளை
புத்தாடையென
வெளுக்கிறது



மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்
சேஷசாயிபிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

Criterion-MC-910

''பைசா என்று எழுதுவதற்குப் பதில் ரூபாய் என்று ஏதோ நினைவில் எழுதிவிட்டேன். என்னை மன்னிச்சுடுங்க.''

''பரவாயில்லே! எடுத்துண்டு போய்ப் பத்திரமாய் உள்ளே வை. இன்னும் ஒரு ஐந்தாண்டுத் திட்டம் கழிந்ததும் இதையே வாசல்லே மாட்டிக்கலாம்.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சிறியதுதான். என் வீடு சிறியதே என்பதற்காக நான் சிறுமைப்பட்டுக் கொள்ளவும் தயாராயில்லை. எத்தனையோ பெரிய வீடுகள், என் வீட்டைக் காட்டிலும் நல்ல வீடுகள் இருக்கவே செய்கின்றன. என் வீடு சிறியது தான் என்றாலும், என்னைப் போல் ஒருவன் வாழ அது எவ்வளவோ போதுமானது. போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து. ஆகையால் வானளாவ நான் ஆசைக் கோட்டை கட்டி அழியவில்லை.

நான் எனக்காக ஒரு வீடு கட்டிக் கொண்டு விட்டதைக் கண்டது காற்று. உடனே என்னை அணுகி, ''இதென்ன இது?'' என்று கேட்டது.

''இது ஒரு வீடு!'' என்றேன் நான் பதிலுக்கு.

அது உரக்கச் சிரித்தது. ''இதற்குப் பெயர் வீடா? வேடிக்கையாயிருக்கிறதே! வெட்கமாயில்லை உனக்கு, இதைப் போய் வீடு என்று சொல்லிக் கொண்டு திரிய?'' என்றும் எள்ளி நகையாடியது.

நானும் சிரித்துக் கூறினேன்: ''இதுவரை நீ கண்டிராத பொருளை இன்று கண்ணெதிரே காண்கிறாய்!''

''என்ன சொன்னாய்? இது ஒரு வீடு! அதுவும் நான் கண்டிராதது! அப்படித் தானே?'' என்று கேட்டு மீண்டும் நகைத்தது காற்று.

''ஆம், வீடு... இது வீடுதான்!'' என்றேன் நானும் சிரித்து.

அது சிரித்துக் கொண்டே, ''சரி. அப்படியானால் நான் உன் வீட்டுக்குள் பிரவேசித்துச் சோதித்துப் பார்க்கிறேனே!'' என்றது.

சொன்ன கையோடு கையை நீட்டிக் கதவைத் தட்டிக் கொட்டிச் சோதித்துப் பார்த்தது. கதவு உடைந்து விழுந்தது. அடுத்தபடியாகத் தன் கரத்தை நீட்டி ஜன்னல்களைப் பரிசோதித்துப் பார்த்தது. ஜன்னல்களும் உடைந்து விழுந்தன. கடைசியாக அது எழும்பிக் கூரையை நோக்கிச் சென்றது. அது எழும்பிச் செல்லறதும் கூரை கீழே விழுந்தது. காற்று என்னைப் பார்த்துச் சிரித்தவாறு கேட்டது:

''நீ கட்டிய வீடு எங்கே?''

நானும் கேட்டேன்: ''என் வீடு எங்கே?'' ஆனால் நான் சிரிக்கவில்லை.

ஃ ஃ ஃ

ஆரம்பத்தில் காற்று என்னை விரட்டி அடித்த பொழுதெல்லாம் நான் நகரத்துக்குத் திரும்புவதுண்டு. கடைசியாக நிகழ்ந்த சம்பவம், என்னைப் பட்டணத்துக்குத் திரும்ப வொட்டாமல் அடித்தது. ஒவ்வொரு முறையும் நான் மோசம் போனதனால், எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. நகரத்துக்குத் திரும்பலாம் என்றாலோ அதுவும் இயலாத காரியம். அங்குள்ள நிலையை யார் கண்டார்கள்? வாயுமண்டலத்துக்குப் போகலாம் என்றாலோ அதுவும் ஆகாத காரியம். ஏனெனில், காற்று என்னை அடித்து அடித்து விரட்டியிருந்தது. நானே ஒரு கூடாரம் சமைத்துக் கொண்டேன், குடிசை வேய்ந்து கொண்டு பார்த்தேன். எதுவும் காற்றுக்கெதிரே தாக்குப் பிடித்து நிற்கவில்லை. பிறகு நானே ஒரு சிறிய வீடு கட்டிக் கொண்டேன். அதனாலும் காற்றை எதிர்த்து நிலைத்து நிற்க முடியவில்லை. காரணம், அது சிறியதாகவும் வலுவற்றதாகவும் இருந்ததனாலோ என்னவோ? அதுவே பெரிதாகவும் வலுவுள்ளதாகவும் இருந்தால் காற்றைச் சமாளித்திருக்கக் கூடுமோ? நான் வலுவான மரங்களும், அழுத்தமான உத்திரங்களும், பெரிய பெரிய பாறைக் கற்களும், கட்டுமானத்துக்கும் பூச்சுக்கும் சிறந்த சிமிட்டியும் எடுத்துச் சென்றேன். சிறந்த கொல்லத்துக்காரர்களை அமர்த்திக் கொண்டேன். இரவும், பகலும் அவர்களுடைய வேலையைக் கருத்தோடு கண்காணித்தேன். இந்தத் தடவை, நான் புத்திசாலித்தனமான ஒரு காரியத்தைச் செய்தேன். அதாவது ஆழமான, வலுவான அஸ்திவாரத்தைப் போடச் செய்தேன்.

வீடு கட்டி முடிந்தது. கம்பீரமாக கனஅழுத்தலாக நின்றது.

வீடு கட்டி முடிந்தது இந்தக் காற்றுக்கு எப்படித்தான் குருவிக்கு மூக்கில் வியர்த்த கதையாகத் தெரிந்ததோ, என் வீட்டைத் தேடி வந்தே விட்டது; சாத்தியிருந்த ஜன்னல் கதவுகளைத் தட்டியது.

''யார் தட்டுகிறது ஜன்னல் கதவுகளை?'' என்று கேட்டேன் நான்.

''அது வேடிக்கையாகச் சிரித்து, ''உன் பக்கத்து வீட்டுக்காரன்!'' என்றது.

''புயலும், சூறைக்காற்றும் வீசும் இந்த இரவு வேளையில் ஒரு பக்கத்து வீட்டுக்காரனுக்கு இன்னொரு பக்கத்து வீட்டுக்காரனோடு என்ன வேலை?'' என்று கேட்டேன்.

அது சிரித்தது: புது வீட்டில் வந்திருக்கும் பக்கத்து வீட்டுக்காரன் சுகமாக வாழ வேண்டும் என்று வாழ்த்திப் போகவே வந்திருப்பதாகக் கூறியது.

''ஜன்னல் வழியே திருடனைப் போல நுழைந்து பக்கத்து வீட்டுக்காரனை வாழ்த்துவதும் ஒரு பழக்கமா?'' என்று கேட்டேன்.

அது மீண்டும் வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தது: இம்முறை வாசற் கதவைத் தட்டியது.

''யார் தட்டுவது வாசற் கதவை ?'' என்று கேட்டேன்.

''உன் பக்கத்து வீட்டுக்காரன்தான்! தெரியவில்லை?'' என்றது காற்று.

''பக்கத்து வீட்டுக்காரனா? அப்படியானால் தாராளமாக உள்ளே வரலாமே!'' என்றேன் நான்.

''ஆனால் கதவு பூட்டியிருக்கிறதே !'' என்றது.

''கதவு பூட்டியிருக்கிறதா? நான் பூட்டியிருப்பதால்தான் கதவு பூட்டியிருக்கிறது!'' என்றேன் நான் கேலியாக.

''திறவேன் !'' என்றது காற்று.

''எனக்குக் குளிர் என்றால் தாங்காது. பொழுது புலர்ந்து சூரியன் உதிக்கும் வரையில் பொறுத்துக் கொள். அப்புறமாகத் திறந்து விடுகிறேன்!'' என்றேன் நான்.

ஃ ஃ ஃ

பொழுது புலர்ந்து கதிரவன் உதித்ததும் நான் கதவைத் திறந்து காற்றை வரவேற்பதற்காக வாசலுக்குப் போனேன். ஆனால் காற்றை அங்கே காணவில்லை. நான் என் வீட்டு வாசலில் நின்று சுற்றிப் பார்த்தேன். பார்வை சென்றவிடமெல்லாம் பாழாகிக் கிடந்தது. ஒரு மரம் செடியைக் காணோம், பயிர் பச்சையைக் காணோம். புழுதியும் கற்களுமே காட்சி தந்தன. ''நாம் இங்கு ஒரு தோட்டம் போட்டால் என்ன?'' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.

அதே கையோடு கடப்பாறை ஒன்றை எடுத்துப் பூமியைத் தோண்டினேன். மண்வெட்டி எடுத்து மண்ணைப் பதப்படுத்தினேன். விளைநிலம் தயாரானதும், சில பதியன்கள் வாங்கி வந்தேன். மழை வந்தது. நாற்றுகளுக்கு நீர் ஊற்றியது. பனி பெய்தது. நாற்றுக்கள் முளை விட்டுக் கிளைத்தன. சூரியன் சீராட்டி வளர்த்தான். செடிகள் செழித்தன. நான் ஊன்றிய செடிகள் விரைவிலேயே மரமாகிப் பல கிளைகளுடன் காட்சி தந்தன.

நானே ஒரு பெஞ்சு தயார் செய்து கொண்டு, மரங்களின் நிழலில் அமர்ந்தேன்.

ஒரு நாள் இரவு காற்று திரும்பி வந்தது. மரங்களைத் தாக்கிற்று. மரங்கள் என்ன செய்தன, தெரியுமா? பதிலுக்குக் காற்றை எதிர்த்துத் தாக்கத் தொடங்கின. காற்று சீறி எழுந்து மரங்களை அலைத்தது. மரங்களும் பேயெனத் தலைவிரித்தாடிச் சீற்றத்துடன் காற்றைச் சாடின. காற்றுக்கு மூச்சு முட்டியது. அது திரும்பி வந்த வழியே சென்றது தலைக் குனிவோடு.

அது முதற்கொண்டு காற்று அடக்கமாகவும் சாந்தமாகவும் இருக்கலாயிற்று. அது மட்டுமா? என்னோடு நல்லவிதமாகவும் பழகலாயிற்று. நானும் அதோடு பதிலுக்கு நல்லபடியாகப் பழகினேன். காற்று வரும்பொழுதெல்லாம், அதனை எதிர்கொண்டழைக்க நானே முந்திக்கொண்டு வெளியே வருவேன். தோட்டத்து மரங்களுக்கடியில் போட்டிருந்த பெஞ்சியில் நானும் அமர்ந்து அதையும் அமரச் சொல்வேன். காற்று வரும், வந்து என்னருகில் அமரும். வரும்பொழுதெல்லாம் தன்னோடு மலைப் பகுதியிலிருந்தும் பள்ளத்தாக்கிலிருந்தும் நறுமணங்களைக் கொண்டு வரும். அமெரிக்கையாக என்னைச் சுற்றி வீசி விசிறி போன்ற சுகத்தை அளிக்கும். தனது பழைய செயல்களுக்குப் பச்சாத்தாபப்படுபவனைப் போல என்னோடு அது பழக முற்பட்டதால், நானும் அதன் பழைய செயல்களை நினைவுபடுத்துவதில்லை. அது என்னைப் பிரிந்து செல்லும் பொழுதெல்லாம், மீண்டும் மீண்டும் வர வேண்டும் என்று அதற்கு நான் அழைப்பு விடலானேன். பண்பிற் சிறந்த, நட்பிற் சிறந்த பக்கத்து வீட்டுக்காரர்களாக நாங்கள் பழகலானோம்.

எனக்குக் காற்று என்றால் மிகவும் பிடிக்கும். அதே போலக் காற்றுக்கும் என்னைக் கண்டால் ரொம்ப ரொம்பப் பிடிக்கும்.

[ஸ்ரீ அக்னானின் இந்தச் சிறுகதை 'ஜெருசலம் போஸ்ட்' டில் 1958ம் ஆண்டு ஆகஸ்டு மாதத்திய இதழில் அவரது 70வது பிறந்த விழாவின் நினைவாக வெளியாகியது.

இஸ்ரேயில் நியூஸ் சஞ்சிகையிலிருந்து — தமிழாக்கம் செய்தவர்: —ரா. வீ.]



டாக்டர்: இந்த மழைக் காலத்திலே ஜலதோஷம் ஜுரம் வருவது சாதாரணம்.... நீங்க போங்க, இதெல்லாம் வரலலேன்னுதான் உடம்பைப் பரிசோதிக்கணும்.... சரி! நீங்க எதற்கு வந்தீர்கள் ?

வந்தவர்: எனக்கு ஒன்றுமில்லை, அவரோடு சும்மா வந்தேன்.

டாக்டர்: ஒன்றுமில்லையா? அப்ப உம்மைத்தான் பரிசோதிக்கணும், இப்படி வாங்க.

# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி

ராணாவின் பிரேமை பொங்கும் நயனங்களைக் கண்டதும் மீராவின் கண்களில் எல்லையற்ற பீதி பரவியது. 'வீல்' என்று ஒரு கத்துக் கத்தினாள். சந்தனக் கிண்ணத்தைக் கீழே போட்டுவிட்டு முகத்தைக் கைகளால் பொத்திக் கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள். வானவில்லின் மனோகரத்தைப் பார்ப்பதற்காக மேக மண்டலத்தைப் பார்த்தவன் தலையில் இடி விழுந்தது போல், மீராவின் எதிர்பாராத செய்கையால் தன் நிலை குலைந்தான் கும்பராணா.

விக்கித்துப் போன அவனுக்குத் தன்னைச் சுதாரித்துக் கொள்ளவே சிறிது போதாயிற்று. தன்னிடமுள்ள பொறுமை, அநுதாபம், மனோதிடம் அனைத்தையும் பெரும் பாடுபட்டுத் திரட்டிக் கொண்டு மீராவிடம் பேசினான் அவன்:

''மீரா, அழாதே! உன்னுடைய கர்ம பலனோ, அல்லது என்னுடைய பாபமோ நம்மை இப்படி ஒன்று சேர்த்துவிட்டது. ஆனாலும் உலகுக்கு நாம் ஒன்று சேர்ந்து விட்டாலும், நம் மனங்கள் ஒன்று சேரும் வரையில் உன்னை நான் ஒருபோதும் நிர்ப்பந்தம் செய்ய மாட்டேன். உன் மனத்திலிருப்பதை யெல்லாம் என்னிடம் சொல்லுமளவுக்கு உனக்கு என்னிடம் நம்பிக்கை உண்டாகாவிடினும், என் மனத்தில் இருப்பதைத்தான் உன்னிடம் விண்டு சொல்கிறேன் என்பதையாவது நம்பு. உன் தந்தையாக இருக்கக்கூடிய வயசு படைத்த நான், பல தாரங்களை இழந்தபின்பும் உன்னை நாடியதற்காக நீ என்னை வெறுத்து ஒதுக்கினால் அது பரம நியாயம் என்று ஒப்புக்கொள்கிறேன். அல்லது உனக்கு இயல்

பாகவே மனக மண வாழ்க்கையில் ஈடுபடாமல் பெரியோர் சொல்லுக் காகவே நீ என் முன் கைநீட்டி விருப் பிலும் உன் உணர்வை நான் மதித்து விலகுகிறேன். என்னைத் திருப்திப் படுத்த வேண்டும் என்றெண்ணி நீ உன் மனத்தின் போக்குக்கு விரோத மாக ஒருகாலும் நடக்க வேண்டாம் தாயே! நம் இருவரில் உன் போக்குத் தான் பவித்திரமானது. அதற்குத் தலை வணங்க நான்தான் கற்க வேண் டும். அது இயலாவிடில் நான்தான் அழ வேண்டும். நீ அழ வேண்டிய

ராணாவின் அநுதாபம் அவளது இதயத்தைக் கிளறிவிட அவள் உள்ளம் திறந்து பாடிவிட்டாள்!



அவசியமேயில்லை தேவி! உன்னை அன்னையின் சயனக்குறைத்துக்கே இதோ அனுப்பிவிடுகி றேன். நிம்மதியாகப் படுத்துத் தூங்கு.''

நிம்மதி ! நிம்மதியா? மீராவுக்கு இந்த ஜன்மத்தில் நிம்மதியா? நிம்மதியாக அவள் நித்திரை கொள்ள அந்த நீல நிறத்துப் பாலகன் விட்டு விடுவானா? கல்லும் மண்ணும் உருகும்படி இதோ மகாராணா கூறும் வார்த்தைகளில் மனசு நெகிழ்வதைவிட அந்தப் பிள்ளையை நினைத்தால் அல்லவா நெஞ்சு கரைகிறது? அதன்பின் உறக்கம் ஏது? மீளா நித்திரை கொண்டால்தான் இந்த மீராவுக்கு விடிவு உண்டு.

மீரா பாடினாள்! நள்ளிரவின் பயங்கர மௌனத்தில், சோகத்தின் அடர்த்தியில் புண்ணுண்ட குரலில் பாடினாள்!

சயனத்தில் ஈட்டி முனைகள்
நயனம் துயில்வ தெப்படியோ ?
பூதல எல்லை கடந்த
நோதலற்ற பரவெளியில்
காதலன் சயனம் செய்கின்றான்
ஏதலன் எங்ஙனம் செல்வேன்?
புண்ணுண்ட இதயத் தவிப்பை
இன்னொருவர் அறிவாரோ ?
புண்படுத்திய புண்ணியவான்
கண்ணெடுத்துப் பாரானோ ?
அருந்தி அன்பைப் பித்தானேன்
மருந்து தருபவனும் மறைந்தான்
புரிந்து கொள்வார் பிறர்இல்லை
வருந்துவதன்றி வழி இல்லை
காவலனின் அன்பும் பாணம்
மாவலி தந்து நலிந்தேன்
ஸாம்வலியா இங்கு வந்தென்
ஆவலினைத் தீர்ப்பானோ ?

மீரா என்ன பாடுகிறாள்? கும்பராணாவுக்கு இது வரையில்லாத புது ஐயம் எழுந்தது. 'வேறு யாரையோ அவள் நேசித்தாளா? அவளை வலுக்கட்டாயமாக எனக்கு மணம் முடித்தார்களா? அந்த யாரோ ஒருவன் யார்? ஸாம்வலியா என்கிறாளே! சியாமளன் என்றால்...... கண்ண பெருமானா? அவனை எங்காவது மணந்து கொள்ள முடியுமா? இது எங்கேனும் சாத்தியமா?'

''மீரா, மீரா! உன் மனத்திலிருப்பதைச் சொல் மீரா!'' என்று மன்றாடினான் ராணா.

மீராவுக்கோ தான் இப்போதே அதிகம் சொல்லி விட்டோம், பாழாய்ப் போகிற பாட்டு தன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டது!' என்றுதான் தோன்றியது. 'தான் கண்ணனைப் பக்தி செய்வதையே மேவார் பொறுக்காதெனில், காதல் செய்வதை அது ஒருகாலும் சகிக்காதல்லவா? தன்னுடைய கிருஷ்ண பிரேமையை ஒரு நாளும் புக்ககத்தாரிடம் வெளியிடக் கூடாது என்று அன்னை வேறு உறுதிமொழி வாங்கிக் கொண்டிருந்தாளே! இந்த மனிதரின் முன்னிலையில் இருந்தால் தன் மனம் இளகிவிடும். எனவே இங்கிருந்து ஓடிவிட வேண்டியதுதான்!'

வெளியே ஓடினாள் மீரா. அந்த உப்பரிகையிலிருந்து தபதபவென்று இறங்கலானாள்.

ராணாவும் தொடர்ந்து வந்து பார்த்தான். மீரா அந்த அரண்மனைத் தோட்டத்தினூடே புகுந்து அடுத்திருந்த சௌபாக்கிய தேவியுடைய மாளிகையின் உள்ளே புகுந்ததைக் கண்டான்.

தத்தளித்த ஓர் உள்ளம் ஓடிற்று. தத்தளித்த இன்னோர் உள்ளத்தை ஏந்திய ராணா சயன கிருகத்துக்குள் நுழைந்தான்.

மனம் தொய்ந்து போய்க் கட்டிலில் வந்து விழுந்தான், எதற்கும் கலங்காத கும்பராணா. அறைக்குள் ஏதோ காலடிச் சத்தம் கேட்டது.

கோலாக்கள் தான் மீரா ஆக்ஞைப்படி பழமும் பணியாரமும் கொண்ட தட்டுக்களும், பால் ஜாடியும் கொண்டு வந்து ஒரு பீடத்தின் மீது வைத்துவிட்டு, வெறுமையாகக் கிடந்த இரண்டாவது மஞ்சத்தைப் பார்த்து விழித்தபடியே வெளியேறினார்கள்.

ராணா அந்தப் பீடத்தைக் காலால் எற்றினான். பால் ஜாடிக்குள் இருந்த கோப்பை 'கிணுங் கிணுங்' என ஆடிற்று.

'மீராவுக்கு வாழ்க்கை இன்பத்தைப் பழரசமாகத் தந்து தோற்றது போதாது என்று பாலாக வேறு தரவா ஆசைப்பட்டாய்?' என்று தன்னைக் கேட்டு அக்கோப்பை சிரிப்பதாகவே கும்பனுக்குத் தோன்றியது.

## அத்தியாயம் 17

# அநுதாபத்துக்கு ஒருவன்

தூரத்தே தெரியும் சித்தோர்க் கோட்டை மதில்களைப் பார்த்தவாறே சிந்தாகுலமாக அமர்ந்திருந்தான் ராணா. இந்தக் கோட்டையைக் கட்டியதற்காகத் தன்னைப் பாரெல்லாம் வியந்து புகழ்கிறது! ஆயின் மீரா தன் மனத்தைச் சுற்றி இதைவிடப் பலமான கோட்டையை அல்லவா கட்டிக் கொண்டிருக்கிறாள்! அதனுள் பிரவேசித்து, அந்தரங்கத்தை அறிவது எப்படி?

மீராவும் அதே போதில் தன் மாளிகை உச்சியில் வேதனை எண்ணங்களுடன் அமர்ந்து அதே சித்தோர்க் கோட்டை மதில்களைத் தான் பார்த்துக்கொண்டிருந்தாள். 'கிரிதரா, இத்தனை கோட்டை கொத்தளங்களைத் தாண்டி நீ எப்படி உள்ளே வரப் போகிறாய்? இல்லை.... நீ வந்து விட்டாய். ஆனால் பேடகத்தில் பதுங்கி யாரும் அறியாமல் அல்லவா வந்திருக்கிறாய்? இது என் மனத்துக்கு ஒவ்வவே இல்லையே? கண்ணையா, உன்னைத் திருட்டுத்தனமாகத்தான் நான் வணங்க வேண்டுமா?' என்று கண்ணீர் சிந்திக்கொண்டிருந்தாள்.

மனோ வியாதி பிடித்த புதிய ராணியைப் பார்த்துப் பெருமூச்சு விட்ட தாதி ரத்தினா, ராணாவிடம் சென்றாள் – அவனுக்கும் மனோ வியாதி பிடித்திருப்பதைக் காணவே!

ராணாவை அவள் பல முறை வணங்கி எழுந்த பிறகுதான் அவனுக்கு இவ்வுலக நினைவே வந்தது. அவனுக்கு இந்த நினைவு வருகிற வரையில் விசுவாசம் மிகுந்த அந்த மூதாட்டியும் விடாமல் வணங்கிக் கொண்டேயிருந்தாள்.

ராணாவுக்குச் சங்கடமாக இருந்தது. தான் பிறந்த நாளாகத் தன்னைப் பேணியும் பணிபுரிந்தும் வந்துள்ள ரத்தினாவை அவன் தாய்க்குச் சமமாக நினைத்திருக்கிறான். என்றாலும் ராஜகுல தர்மம் என்பது அவளை அவன் வணங்கவொட்டாமல் தடுத்தது. அவள் தனக்கு விழுந்து விழுந்து வணக்கம் தெரிவிக்கக் காரணமாக இருந்து விட்டோமே என்பது கும்பனின் மனத்தை உறுத்தியது.

''போதும் ரத்தினா, நமஸ்காரம்! உன்னைக் கவனிக்காத குற்றம் போதாது என்று உன் முழங்காலை முறித்த குற்றத்தை வேறு செய்ய வேண்டுமா? சரி, விடிந்தவுடன் வந்திருக்கிறாயே, என்ன அவசர காரியம்?'' என்றான்.

ரத்தினா சிரித்தாள். ''ராவல்ஜி விடிவதற்கு முன்பே எழுந்திருந்து அநுஷ்டானங்கள் செய்து விடுவாரே. இன்று பிராத: காலம் கழிந்த பின்பும் சயனத்திலிருந்து எழுந்திருந்து வரவில்லையே என்றுதான் பார்க்க வந்தேன்'' என்றாள் சுவாதீனமாக.

''என்ன, பிராத: காலம் முடியப் போகிறதா?'' என்று பரபரப்படைந்தான் கும்ப ராணா.

''சுள்ளென்ற வெய்யிலைப் பார்த்தாலே தெரியவில்லையா? ராவல்ஜி நன்றாக உறங்கிவிட்டார். நியாயம்தான், ரொம்பவும் நியாயம்தான்'' என்று கண்களைச் சிமிட்டினாள் ரத்தினா.

# பின்னியின் தூய பட்டுப்புடவை

**எந்த சூழ்நிலைக்கும் ஏற்றது.**

பின்னியின்
மேன்மையான தூய பட்டுப்
புடவைகள் மனங்கவரும்
பலப்பல நிறங்களிலும்,
பலவகை வண்ணங்களிலும்
வடிவமைப்புகளிலும்
எங்கும் கிடைக்கின்றன

பின்னியின் இதர
தூய பட்டு வகைகள்:
மென்பட்டுப் புடவைகள்
ஜார்ஜெட்,
ஸொனடா ஷாட்
ஸில்க் புடவைகள்,
ஸ்பன் மற்றும்
பினெயின் பட்டு ஷர்ட்டிங்,
பட்டு ஸூட்டிங்,
வேஷ்டிகள் மற்றும்
அங்கவஸ்திரங்கள்.

சிறு சேமிப்புகளில் முதலீடு செய்யுங்கள்



பின்னி பட்டுகளை
வாங்கும்போது, இந்த
அடையாளம் இருக்கிறதா
என்று கவனியுங்கள்.

பெங்களூர் உல்லன்,
காட்டன் & ஸில்க் மில்ஸ்
கம்பெனி லிமிடெட்,
அக்ரஹாரம் ரோடு,
பெங்களூர் 23,

**பின்னி**

—துணி உலகிலே புகழ் பெற்ற பெயர்

JWT-BM-3755

# நாள்தோறும் உங்கள் இல்லத்தை நீங்கள் ஒழுங்காக வைத்துக்கொள்ள விரும்புகிறீர்கள்...



## ஆனால் உங்கள் பணவிஷயம்?

பணப் பிரச்னை முன் நிற்கும் போது நீங்கள் உங்கள் இல்லத்தை எப்படி ஒழுங்காகவும் இன்பம் கொழிக்கும் வகையிலும் வைத்துக்கொள்ள இயலும்? உங்கள் பொருளாதாரப் பிரச்னை குறித்துக் கலந்து பேச உங்களுக்கு அருகாமையிலுள்ள பாங்க் ஆப் பரோடாவின் கிளைக்கு விஜயம் செய்யுங்கள். உங்களுக்குப் பல வழிகளில் எங்களால் உதவமுடியும்.

உதாரணமாக, எங்கள் பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்கு ஆரம்பியுங்கள். நாங்கள் 4% கணிசமான வட்டி தருகிறோம். முன்னறிவிப்பு இன்றியே வருடமொன்றுக்கு 150 தடவை வரை நீங்கள் பணம் எடுக்கலாம். உங்கள் உபயோகத்திற்கென செக் புத்தகமும் கிடைக்கும். எங்கள் பாங்கின் மூலம் பணம் சேமிப்பது சுலபம் என்பதை மறவாதீர். ஒரே ஒரு ரூபாயைக் கொண்டே சேமிப்புக் கணக்கு ஆரம்பிக்கலாம் நீங்கள்.

செக் அல்லது பாஸ் புத்தகத்தை விட மிக முக்கியமானது நாங்கள் உங்களுக்கு துவக்கக் காலம் தொட்டே வழங்கும் விரைவான, திறமைமிக்க சேவையாகும்.

'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற இலவச புத்தகத்திற்கு எழுதவும். இதில் நாங்கள் வழங்கும் சேவை அனைத்தும் விவரமாகத் தரப்பட்டுள்ளது.




**தி பாங்க் ஆப் பரோடா லிமிடெட்**

(நிறுவனம் 1908) பதிவுபெற்ற அலுவலகம்: மாண்ட்வி, பரோடா.

இந்தியா முழுவதும் 240 கிளைகளுக்கு மேல் உள்ளன. லண்டன், கிழக்கு ஆப்ரிக்கா, கிழக்கு பாகிஸ்தான், பிஜி தீவுகள், மொரிஷியஸ் மற்றும் டுபாயி ஆகிய இடங்களிலும் கிளைகள் உள்ளன.

CMBB-138 TM

ராணா புரிந்து கொண்டான். "நேற்று ராத்திரி மீராபாயின் அறைக்கு நீதான் காவல் இருந்தாயாக்கும். அதுதான் உன்னைக் கேலி செய்ய வைக்கிறது" என்றான். தனது ஆசாபங்கத்தை மறைப்பது அவனுக்கு வெகு சிரமமாகத்தான் இருந்தது. ஆயினும் அவன் அவசியம் அந்தச் சாதனையைச் சாதித்தேயாக வேண்டும்!

"காவலாயிருந்தேன்? ராணி சாகேபா அங்கேயிருந்து தப்பி இங்கு ஓடி வருவதற்கே நான்தான் உடந்தை. எனக்கு நன்றி சொல்லுங்கள், மகராஜ்! சாகேபா உறக்கமே வராமல் புரண்டு கொண்டிருந்தார். நியாயம்தானே? நான்தான் தைரியமாக அவரிடம் சொன்னேன்: 'ராஜமாதாவும், ராஜபேடி ஊதாவும் உலகமே புரண்டாலும் விழித்துக் கொள்ள மாட்டார்கள். நீங்கள் ராவல்ஜியைப் பார்த்துவிட்டு வரலாம்' என்றேன். அதோடு இரண்டுசெவிட்டு ஊமைத் தாதிகளையும் சாகேபாவோடு இவ்விடத்துக்குத் துணை அனுப்பி வைத்தேன். ஆனால் சாகேபா ஏனோ வெகுசீக்கிரமே திரும்பி விட்டார். அப்புறமும் இரவு தூங்கவில்லை. நீங்களானால் விடிந்து பத்து நாழியாகியும் எழுந்திருக்கவில்லை." கெகெ மூட்டுகிற குரலில் ரத்தினா பேசிக்கொண்டே போனாள்.

கும்பராணா தனது மன வெழுச்சியை அடக்கிக் கொண்டு, "ரத்தன்தேவி, உன் வாயில் நான் நன்றாக விழுந்து புறப்படும்படி செய்துவிட்டாள் மீராபாய். உனக்கும்தான் அறுபது வயசுக்குச் சிருங்காரப் பேச்சு வேண்டிக் கிடக்கிறது! இப்போதைக்கு, என்னைத் தவிர வேறு யாரைக் கேலி செய்வாய்? இன்னும் கொஞ்ச நாட்கள்தான் என்னிடம் விளையாடுவாய். அப்புறம் ராய்மல்லுக்கு மணமாகி சிருங்காரதேவியை அவன் அழைத்து வந்து விட்டால் என் பக்கம் நாடுவாயா?" விளையாட்டாகவே விடை சொன்ன ராணா, "சரி, காலையில் மீராபாயைப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

"பார்த்தது மட்டுமா? இன்றைக்குத்தானே சாகேபா சொந்த மாளிகையில் பிரவேசிக்க முகூர்த்தம் வைத்திருந்தோம்! சூரியோதயத்தின் போதே முகூர்த்தம். நீங்களோ எழுந்திருக்கவில்லை. பாய்ஜிராஜ், ராஜபேடி இரண்டு பேரும் விழித்துக் கொண்டபோதிலும் வரவில்லை. நான்தான் சாகேபாவைப் புது மஹலில் கொண்டு போய் அமர்த்தினேன். தட்சிணை தாருங்கள். தட்சிணை தந்தால்தான் காரியம் சாதகமாகும்" என்று கை நீட்டினாள் ரத்தினா.

கும்பராணா தன் கழுத்தில் தெரிந்த ஒரு நல்முத்துச் சரத்தை எடுத்து அவள் கையில் போட்டான். ஒருகால் அதனால் காரியம் சாதகமாகுமோ என்றுகூட அவனுக்கோர் அசட்டு ஆசை. "சரி, இப்போது மீராபாய் எப்படியிருக்கிறாள்?" என்றான்.

"ராவல்ஜிக்குப் பெண்டாட்டிப் பெருமை ரொம்ப ஜாஸ்தியாய் இருக்கிறது. சாகேபாவை நான் இப்போது வாய் கொள்ளாமல் வருணித்து நீங்கள் செவி கொள்ளாமல் அதைக் கேட்க வேண்டுமாக்கும்!"



முதலாளி: குழம்பு, ரசத்திலே காரமே இல்லேன்னு என்னண்டை சொன்னால்...? பெண்டாட்டி கிட்டே போய்ச் சொல்லும்!
சிப்பந்தி: இல்லே சார்... மிளகாய் வத்தல் விலை ஏறிக்கிடக்கு. வாங்கறசம்பளம் போதல்லே.

"நான் இப்போது வருணனை கேட்கவில்லை, ரத்தன். அப்படிக் கேட்க வேண்டுமானால் அதற்கென்றே பிறந்த சாரணர்களை வருணிக்கச் சொல்வேனேயன்றிக் கற்பனா சக்தியே இல்லாத ரத்தன் பாட்டியைத்தான் கேட்க வேண்டுமாக்கும்! ராத்திரி முழுதும் மீராபாய் தூங்கவில்லை என்றாயே, இப்போது அவள் உடம்பு எப்படியிருக்கிறது...." கும்பனின் நாவு தயங்கித் தயங்கித் தொடர்ந்தது: "இப்போது அவள் உடம்பு எப்படியிருக்கிறது, மனசு எப்படியிருக்கிறதென்றுதான் கேட்டேன்."

கும்பனின் குரலில் இருந்த தழுதழுப்பு ரத்தினாவின் உள்ளத்தைக் குலுக்கி விட்டது. இவ்வளவு நாழிகையாக அவளும் மனசுக்குள் ஏதேதோ ஐயங்களையும், கவலைகளையும் புதைத்துக் கொண்டுதான் விளையாட்டுப் பேச்சுப் பேசினாள். இப்போது அவளால் தாங்க முடியவில்லை.

வெளியே சிந்தாத கண்ணீரில் குரலைத் தோய்த்து மிகத் தணிவாகப் பேசினாள்: "ராவல்ஜி, சாகேபா இன்னமும் அப்படியேதான் இருக்கிறார். ஆனால் ஏகலிங்கர் நம்மைக் கைவிட மாட்டார்."

ராணா விரிந்த நயனங்களுடன் ரத்தினாவை உற்றுப் பார்த்தான். "நான் மீராபாயை வந்து பார்க்கலாமா?" என்று கேட்டான்.

ரத்தினாவின் உள்ளம் பிளந்து போயிற்று. கைப்பிடித்த கணவன் கலியாணமான உடனேயே மனைவியை வந்து பார்க்கத் தயங்கும்படி ஆயிற்று!

"ராவல்ஜி, நீங்கள் தாராளமாக வரலாம். சாகேபா ஒரு போதும் மரியாதை தப்பிவிட மாட்டார். இன்று காலைகூட நீங்கள் எழுந்தாயிற்றா என்று கேட்டுக் கொண்டேதான் இருந்தார். உங்களை நமஸ்கரித்துவிட்டுத்தான்

தம் அரண்மனைக்குள் பிரவேசிக்க நினைத்தார். ராவல்ஜி, உங்களுக்கு நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. என்றாலும், சாகேபாவுக்கு நீங்கள்தான் ஆறுதலாக இருக்க வேண்டும். உங்களையும் விட்டால் இந்த அரண்மனையில் அவர் தன்னந்தனியாகத் தவிக்க வேண்டியதுதான்!''

''ஏன், நானொருவன் இருக்கிறேனே!'' என்ற குரல் கேட்டது.

கும்பராணாவின் இரண்டாவது புதல்வன் ராய்மல் உள்ளே நுழைந்தான். அவனைப் பெருமிதத்துடன் பார்த்தான் ராணா. 'ஆகா, அப்படியே ரண்மல்ஜியின் முகவெட்டு! வீரத்திலும், குணசீலத்திலும்கூட அவருக்குப் பின் வாங்காதவன்தான்' என்று மகனைப் பற்றித் திருப்தியாக நினைத்துக் கொண்டான். ஆனாலும் மனத்தில் பட்டதை யெல்லாம் அப்படியே கொட்டி விடுவது ராய்மல்லின் இயல்பு. 'குழந்தை தானே! போகப் போகத்தானே கட்டுப்பாடு வரும்.'

''என்ன சொன்னாய், குழந்தாய்?'' என்று மகனைக் கேட்டான் கும்பன்.

''சித்தியைப் பற்றித்தானே பேச்சு நடக்கிறது? பாட்டியும் அத்தையும் சித்திக்கு எத்தனை பிரதிகூலம் உண்டோ அவ்வளவும் செய்வார்கள்; யாரேனும் அவளுக்கு அநுகூலமாக இருக்க வேண்டும் என்று தானே மூடி மறைத்துப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? சித்தியிடம் தைரியமாக, பகிரங்கமாக அநுகூலத்துடன், அநுதாபத்துடன் நடந்து கொள்ள நானொருவன் இருக்கிறேன் என்றுதான் சொல்லுகிறேன்'' என்றான் ராய்மல்.

யுவராஜ் பட்டாபிஷேகமாகப் பேசிவிட்ட பின் ரத்தினா அங்கு இருக்கத் தயங்கினான். ''சாகேபாவிடம் நீங்கள் வருவதாகச் சொல்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே நாசூக்காக நழுவினான்.

''ராய்மல், என்ன இருந்தாலும் பாட்டியையும், அத்தையையும் பற்றி நீ இப்படிப் பேசக் கூடாதப்பா. பெண்கள் விஷயத்தில் நாம் மிகவும் மிருதுவாக நடந்து கொள்ள வேண்டும், அப்பனே!'' என்று இதமாகக் கூறினான் கும்பன்.

''போங்கள், அப்பா! உங்கள் மிருதுவும் நீங்களும். முதலில், பெண்கள் பெண்களாகவே இருக்க வேண்டும். இரண்டாவதாக, மரியாதைக்குகந்தவர்கள் மரியாதை செலுத்தும் விதத்தில் நடந்துகொள்ள வேண்டும். நீங்கள் இவர்களிடம் மிருதுவாக நடந்து கொள்வது சித்தியிடம் கடுமையாக நடந்து கொள்வதற்குச் சமானமே. சித்தி மட்டுமல்ல. நாளைக்கு எனக்குக் கலியாணமாகி ஜோதாஜியின் மகள் இங்கு வந்தாலும் இதே பாடுதான். அவளும் இதே மண்டோர் வம்சத்தவள்தான். இதில் மண்டோர் வம்ச வெறுப்போடு, வேறு பல வெறுப்புகளும் கலந்திருக்கின்றன அப்பா. பாட்டிக்கும் அத்தைக்கும் தங்கள் அதிகாரம் புது நாட்டுப் பெண்களால் பறிபோகுமோ என்று ஆத்திரம். அதோடு...''

படபடப்போடு பேசிக்கொண்டே போன ராய்மல் நாவைச் சட்டென்று அடக்கிக் கொண்டான்.

''சொல் குழந்தாய். உன் இதயம் எனக்கு முழுதும் தெரிய வேண்டியதுதானே'' என ஊக்கினான் கும்பன்.

''அப்பா, என் மனத்தில் ஆழமாகப் பட்டதைத்தான் சொல்கிறேன். நீங்கள் தவறாக நினைக்கக் கூடாது. அத்தை இளம் விதவையாகிப் பிறந்தகத்தோடு வந்துவிட்டாள். எனவே வேறு யார் தாம்பத்தியத்திலிருந்தாலும் அத்தை, பாட்டி இருவருக்குமே கண்ணைக் கரிக்கிறது...''

கும்பராணா சிறிது நாழிகை சிலையாக அமர்ந்திருந்தான். 'வயதில் தன்னைவிட எவ்வளவோ சிறியவனாயினும் ராய்மல்லுக்குத்தான் எத்தகைய ஆழ்ந்த திருஷ்டி! அவன் சொல்வது எவ்வளவு வாஸ்தவம்! நேற்று மீராவை அன்னையுடன் சயனிக்கச் சொன்னபோது அன்னை, தங்கை இருவருக்குமே எவ்வளவு திருப்தி ஏற்பட்டது! விசித்திரமான மனப் போக்கு! ஆனால் அதை உதாசீனம் செய்வதற்கில்லை! ராய்மல்லுக்கு உள்ள ஆழ்ந்த திருஷ்டி எனக்கிருந்தால் இந்தக் கலியாணமே நடந்திருக்காதே. இளமையிலேயே கைம்மை கண்ட உதயாவிடம் கும்பனுக்கு ஓர் அநுதாபமே சுரந்தது. 'வீட்டோடு உள்ள விதவைப் பெண்ணின் உணர்ச்சிகளை மதிக்காமல் நான் மீண்டும் மீண்டும் திருமணம் செய்து கொண்டு இன்பத்தைத் தேடியது எத்தனை கொடுமை!' மீரா ஒருத்திக்கு மட்டு மின்றி, உதயா விஷயத்திலும் பெண் பாவத்துக்குத் தான் ஆளாகி விட்டதாக ராணாவின் உள்ளத்தில் தைத்தது.

கண்ணீர் துளிக்க அமர்ந்திருந்த தந்தையைக் கண்டதும் ராய்மல் பதறினான். ''அப்பா, நான் ஏதேனும் தவறாகச் சொல்லியிருந்தால் மன்னித்து விடுங்கள்! உங்கள் உள்ளத்தில் எத்தனை கொந்தளிப்புகள் இருக்கும் என்பது சற்றும் தெரியாமல்....''

ராய்மல்லின் தோளில் கையை வைத்து அழுத்தி, அவனைச் சோக மயமாகப் பார்த்தான் கும்பன். ''என் மனத்தின் கொந்தளிப்பு எனக்குத்தான் தெரியும். உரிய சமயம் வரும்போது உனக்கும் தெரிவிக்க வேண்டியது கடமை என்றே நினைக்கிறேன். உன் உள்ளத்தில் இருப்பதை எனக்குத் திறந்து காட்டுமாறு சொன்னேனல்லவா? என் உள்ளத்தையும் உனக்கு நான் திறந்து காட்டுவதுதான் யுக்தம். வருங்காலத்தில் மேவார் சிம்மாதனம் ஏற வேண்டிய உனக்கும் எனக்கும் இடையில் எந்தத் திரையும் வேண்டாம்'' என்றான் ராணா.

ராய்மல்லின் முகம் சரேலென்று கறுத்தது. ''அண்ணா உதயன் இருக்கும்போது அப்படி ஒருபோதும் சொல்லாதீர்கள் அப்பா'' என்று உணர்ச்சியுடன் கூறினான்.

''ராய்மல்! இப்போதுதானே நமக்குள் ஒளிவு மறைவு வேண்டாம் என்றேன்? இனியும் ஏன் மறைத்துப் பேச வேண்டும்? எனக்கு ஊதா ஒரு தங்கையாக வாய்த்தது போல் உனக்கு உதயன் ஒரு தமையனாக வாய்த்திருக்கிறான். ஊதாவுக்காவது நடத்தையில் பிசகில்லை...'' கும்பன் பெருமூச்சு விட்டான். ''ராணாவின் மூத்த மகன் என்ற ஒரே காரணத்துக்காக உதயனை, நான்

அரசனுக்கிஞல் அதை விட இந்த ராஜ்யத்துக்கு நான் பெரிய தீமை எதுவும் செய்ய முடியாது. நீ வேனன் கதை கேட்டிருப்பாய். முறை தவறி ஆட்சி நடத்திய அவனைப் பெருமக்கள் கொன்றுவிட்டதாகவே புராணம் சொல்கிறது. அப்படி ஒரு பயங்கரம் நிகழாமல் தடுக்க வேண்டுமல்லவா?''

நீண்ட நேரம் ராணு, ராய்மல் இருவருமே பேசவில்லை.

'தன்னிடம் தந்தை எதையோ சொல்ல விரும்புகிருர். ஆனல் சொல்லவொட்டாமல் ஏதோ ஒன்று அவர் தொண்டையை அடைக்கிறது' என்று புரிந்து கொண்டான் ராய்மல். அவர் மனத்தை வேறு திசையில் திருப்புவதே இப்போது புத்திசாலித்தனம் என்று கருதிஞன்.

''அப்போது சித்தியைப் பார்த்து வரலாமே!'' என்று எழுந்திருந்தான் இளவரசன்.

மகாராணுவும் பேசாமல் உடன் எழுந்திருந்தான்.

மீராவின் புது மாளிகைக்குள் அவர்கள் பிரவேசித்தபோது அவள் தன் பேடகத்தைத் திறந்து வைத்துக் கொண்டு, அதிலிருந்த கிரிதர மூர்த்தியைப் பார்த்து உருகிக் கொண்டிருந்தாள்.

கிரிதாரியை அவள் ஒளித்து வைக்கத்தான் ஆசைப்பட்டாள். ஆனல் அவளால் கிரிதாரியை ஒளிக்க முடிந்தாலும் கூட இன்னென்றை ஒளிக்க முடியவில்லை. கானம் தான் அது! கிரிதர மூர்த்தியைக் கண்டவுடன், கால — தேச — வர்த்தமானங்களின் நினைவிழந்து, தாஞகவே அவளது மதுர கண்டத்தில் கானம் சுரந்தது.

> ஊனப்பிறவி என்று விட்டுவிடாதே - ஐயா
> மானம் காத்தெனையாள் மகராஜ்!
>
> இருண்ட வழியதனில் மருண்டுநிற்கும் மீராவின்
> முடிமிசை உந்தன்சீர் அடியினைப் பொருந்திப்
> பாத ஒளிகாட்டி பாதகம் தீர்த்து
> பாதையைக் காட்டிடுவாய் - உ
> பாதையைத் தீர்த்திடுவாய்.
>
> நலிந்து மெலிந்தவள்நான்; வலிவின்
> உறைவிடம் நீ
> குணம் குன்றியவள் நான்; குணக்குன்றுநீ ஐய
> அலைகடலை எதிர்த்து அக்கரை சேர்ந்திட
>
> வலமதனை அருள்வாய் - குண
> நலமதனைத் தருவாய்

ஊருக்கெல்லாம் கும்பராணு மகராஜன். ஆனல் மீராவுக்கோ கண்ணன்தான் மகராஜன். கணவனிடமிருந்தே மானம் காக்கும்படி கண்ணனிடம் வேண்டிக் கொள்கிருள். கும்பனுக்குத் தனது குற்றவாளி உணர்ச்சியைக் களைந்து கொள்ளவே சிறிது போதாயிற்று.

பாடல் முடிந்த பின்தான் மீராவுக்கு இரு நிழல்கள் ஆடுவது தெரிந்தது. பேடகத்தை மூடிவிட்டு, கண்களைத் துடைத்தபடி திரும்பிப் பார்த்தாள்.

முந்திய இரவு நடந்த விபரீதங்களை நினைந்து நடுங்கியபடி திரும்பிப் பார்த்த மீராவுக்கு ராணுவின் கண்களில் ததும்பிய கனிவின் கசிவைக் கண்டவுடன் பெரும் ஆறுதலாக இருந்தது.




''மீரா, ராய்மலை உனக்கு இதுவரை அறிமுகம் செய்து வைக்கவில்லையே. சித்தியைப் பார்க்க அவனுக்குத்தான் ரொம்ப ஆவல்'' என்று கூறிப் பிள்ளையை அறிமுகம் செய்து வைத்தான் கும்பா.

''சித்தி! இப்படி அப்பாவின் பக்கத்தில் வந்து நில்லுங்கள்'' என்று கூறி அவர்களை நமஸ்கரித்தெழுந்தான் ராய்மல்.

தோற்றம் முழுவதும் பரிவு கமழும் ராய்மலிடம் என்ன பேசுவது என்றே தெரியாத மீரா, ''வாருங்கள், நீங்கள் வந்ததில் மிகவும் சந்தோஷம்'' என்று தயங்கித் தயங்கிக் கூறிஞள்.

''சித்தி, நீங்கள் இப்படிப் பேசினீர்களோ, நான் வரவேமாட்டேன். ஏனப்பா, சித்தி இப்படிப் பேசலாமா?'' என்று தந்தையை இழுத்தான் ராய்மல்.

அவன் கூறுவது ராணு மீரா இருவருக்குமே புரியவில்லை.

''ஏனப்பா, சித்தி என்னை 'நீங்கள்' 'வாருங்கள்' என்றெல்லாம் பன்மையில் பேசுவது முறையா? எனக்கு இந்த மரியாதை வேண்டுமென்று நான் இங்கு வரவில்லை. அம்மா வேண்டுமென்றுதான் வந்திருக்கிறேன்.''

ராணுவின் கண்களில் நீர்த் திரையிட்டது. கற்பின் உருவான கும்பலாதேவி குழந்தை ராய்மலைத் தன் மடியில் போட்டுவிட்டுக் கண்ணை மூடியது நேற்று நடந்தது போல அவனது நினைவில் பனிச்சிட்டது.

ராய்மலின் சுவாதீனமான பேச்சு மீராவுக்குத் தென்பளித்தது.

''அம்மா வேண்டும் என்று இப்போது சொல்கிறீர்கள்! நாளைக்கே அகத்துக்காரி வந்து விட்டும், என்னை ஏறெடுத்துப் பார்ப்பீர்களா ?'' என்ருள்.

''என் பாட்டியின் காதில் இந்தப் பேச்சு விழுந்துவிடப் போகிறது. அப்பாவும் புது மணம் செய்து கொண்டு வந்திருக்கிருர்'' என்று கூறித் தந்தையைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரித்தான் ராய்மல். (தொடரும்)

பல்சுவைப் பக்கம்—1

## ஓர் அங்குலம் = 113 டன்கள்

ஓர் அங்குலம் மழை பெய்தது என்ற செய்தியைச் சர்வ சாதாரணமாகத்தான் நினைக்கிறோம்.

ஆனால் ஓர் அங்குல மழை பெய்தது என்றால் ஓர் ஏக்கர் நிலப் பரப்பில் 113 டன் எடை நீர் கொட்டியிருக்கிறது என்பதே பொருள். இப்போது ஓர் அங்குல மழை பெய்தது என்ற செய்தி சர்வசாதாரணமாகத் தோன்றவில்லை அல்லவா?

ஆதாரம்: "நி அமேஸிங் ஏரல்ட்" அனுப்பியவர்: இ. கு. ரா.

கொஞ்சமாகப் பணம் வைத்திருப்பவன் ஏழையல்ல; அதிகமாகப் பணம் வேண்டும் என்று நினைப்பவனே ஏழை.

நிகழ்காலத்தில் ஒழுங்காக வாழ்ந்துவிட்டால் எதிர்காலத்தை விலைக்கு வாங்கிவிட முடியும்.




பிறருக்காகத் தன்னைத் துன்புறுத்திக் கொண்டவனுக்குச் சரித்திரத்தில் நிரந்தர இடம் உண்டு.

பிறர் நம்மைப் பற்றிப் புகழ்வதில் பெருமை இல்லை. பிறருடன் போராடுவதில்தான் இருக்கிறது.

தோல்விக்கு அழகான காரணங்களைக் கூறுபவன்தான் பிழைக்கத் தெரிந்தவன்.

—த. ச.

புதிதாகத் தமது உருக்குத் தொழிற்சாலைக்கு வந்து சேர்ந்த தொழிலாளியிடம் நியமன உத்தரவைக் கொடுத்த முதலாளி, அந்தத் தொழிலாளிக்குப் பின்வருமாறு அறிவுரையும் கூறினார்:

## தவறுகள் செய்!



"இந்தத் தொழிற்சாலையில் நீ எத்தனை தவறுகள் செய்யக் கூடுமோ அத்தனையும் செய்யலாம். ஆனால் ஒருமுறை செய்த தவற்றை மற்றொரு முறை மட்டும் செய்யாதே!"

—த. ச.

இரண்டாம் உலகப் போருக்குமுன் ஜெர்மனியில் யூதருக்கு எதிரான வெறுப்பு உணர்ச்சியை ஜெர்மனி மக்களிடையே ஊட்டினான் ஹிட்லர். இந்த வெறுப்பைப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களிடையே கூடப் பாடத்தோடு பாடமாக ஊட்ட ஏற்பாடு செய்தான். ஹிட்லர் ஆட்சியின்போது பள்ளிகளிலே ஆசிரியர்கள் போடும் கணக்குகள் இவ்விதமாகத்தான் இருக்குமாம்:

"ஓர் யூத வியாபாரி ஒரு வீசை பாக்கு ரூ. 4—11—0 விதம் வாங்கி ரூ. 9—7—0 விதம் விற்றால் அவன் ஒவ்வொரு வீசை பாக்கிலும் ஜெர்மன் மக்களிடமிருந்து எவ்வளவு ரூபாய் கொள்ளையடித்தான்?"

ஆதாரம்: "என் பிரயாண நினைவுகள்"
தகவல்: குத்தாலம் வீ. சம்பந்தன்



## சொந்தம்

அதிகாரம் உலகைப் பார்த்துச் சொல்லிற்று ''நீ எனக்குச் சொந்தம்.''

உலகம் தனது அரியாசனத்தில் அதைக் கைதியாக வைத்தது.

அன்பு உலகத்தைப் பார்த்துச் சொல்லிற்று: ''நான் உனக்குச் சொந்தம்.'' உலகம் தனது வீட்டின் சுதந்திரத்தை அதற்குத் தந்தது.

- தாகூர். தகவல்: த. சங்கரபாண்டியன்.



## தந்திரக் கணக்கு

நீங்கள் 1000 ரூபாய் வைத்திருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள். ரூபாயைப் பத்து மூட்டைகளில் கட்டி வைத்திருக்கிறீர்கள்.

ஒருவர் உங்களிடம் வந்து கடனுக்குக் கொஞ்சம் ரூபாய் கேட்கிறார். அவர் ரூ. 1 முதல் ரூ. 1000 வரை கடன் கேட்கக் கூடும். அப்பொழுது நீங்கள் அவர் எவ்வளவு கடன் கேட்டாலும் முழு மூட்டைகளாக எடுத்தே அவருக்குக் கொடுக்க வேண்டும். மூட்டைகளைப் பிரிக்கவோ அல்லது ரூபாயை அவர் கேட்டதற்கு அதிகமாகவோ குறைவாகவோ கொடுக்கக் கூடாது. அப்படியானால் தாங்கள் 10 மூட்டைகளில் 1000 ரூபாயை எவ்விதம் நிரப்புவீர்கள்?

உதாரணமாக உங்கள் நண்பர் ரூ. 728 கேட்கிறார். அதற்கும் நீங்கள் முழு மூட்டைகளாகவே தர வேண்டும். அவர் 7 ரூபாய் கேட்டாலும் முழு மூட்டைகளாகவே கொடுக்க வேண்டும். எப்படி நிரப்புவீர்கள்?

- ச. கோபாலகிருஷ்ணன்

(விடை 67ம் பக்கம் பார்க்க)

## பந்தியும் பதவியும்

ஆளுங் கட்சி தவறு செய்கிறபோது, அநியாயம் என்று அநேகர் கூறுவர். தவறுதான் என்று ஆறாயிரம் பேர் கூறுவர். தவறு இருந்தால் நமக்கென்ன என்று ஒதுங்கி யிருப்போர் அறுபதாயிரம் பேர் உண்டு. ஆனால் அந்தத் தவற்றைத் தடுத்து நிறுத்துவோர் எதிர்க் கட்சியினர்தான்.

அப்பேர்ப்பட்ட நம்மைப் பார்த்துத்தான் ''இவர்களுக்குப் பதவிப் பைத்தியம்'' என்கிறார்கள். இவர்கள் ஏதோ பதவியை விரும்பாதவர்கள்போல் பேசுகிறார்கள்.



கல்யாண வீட்டில் முதல் பந்தியில் சாப்பிட்டு விட்டவர்கள், இரண்டாவது பந்திக்குப் போகிறவர்களைப் பார்த்து, ''ஏன் அடித்துக் கொள்கிறீர்? கல்யாணச் சாப்பாடு சாப்பிடாவிட்டால் என்ன?'' என்று கேட்பதுபோல் இவர்கள் கேட்கிறார்கள்.

- சி. என். அண்ணாதுரை.

தகவல்: முல்லைவழுதி.

## நாட்டின் பெயரில்லாத அஞ்சல் தலை

ஒவ்வோர் அஞ்சல் தலையிலும், அதை வழங்கும் நாட்டின் பெயர் இருக்கும். ஆனால் பிரிட்டிஷ் அஞ்சல் தலைகளில் நாட்டின் பெயர் கிடையாது. பிரிட்டனிலிருந்து வந்த ஒரு கடிதத்தை எடுத்துப் பார்த்தால், அஞ்சல் தலையில் நாட்டின் பெயர் இராது. அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. 'பென்னி பிளாக்' அஞ்சல் தலைகளை வெளியிட்டபோது, வேறு எந்த நாட்டிலும் அஞ்சல் தலைகள் கிடையா. அஞ்சல் தலையுள்ள கடிதம் என்றால் அது பிரிட்டனிலிருந்து வந்த கடிதம்தான் என்று தெரிந்துகொள்ள முடியும். ஆகையால், அஞ்சல் தலையில் நாட்டின் பெயரைப் பொறிக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. பிற்காலத்திலும் அந்த வழக்கம் நீடித்தது. அஞ்சல் தலையில் மன்னருடைய உருவம் இருப்பதால் நாட்டின் பெயர் அவசியமில்லை என்று கருதப்பட்டது; இன்றும் கருதப்படுகிறது. ஆதாரம்: ''போஸ்டாபீல்'' - கே. ஷேக் ஆதம்

வெள்ளிக் குத்துவிளக்கை ஏற்றினாள் ஸ்வர்ணா. ஊதுவத்தியிலிருந்து வந்த வாசனையும் ஸ்வாமி படங்களுக்குப் போட்டிருந்த குண்டுமல்லிகையின் நறுமணமும் அந்த பூஜை அறையைத் தெய்வ மணம் கமழச் செய்து கொண்டிருந்தன.

ராஜ ராஜேசுவரி படத்தின் எதிரில் உட்கார்ந்து கொண்டாள். மஹிஷாசுர மர்த்தினி ஸ்லோகத்தைச் சொல்லலானாள். நல்ல இனிமையான சாரீரம் அவளுக்கு.

பாதி ஸ்லோகம்தான் சொல்லியிருப்பாள்.

ராகவன் பூஜை அறைக்குள்ளேயே வந்துவிட்டான்.

ஸ்லோகம் சொல்வது தடைபட்டது. அவள் எழுந்தாள்.

''ஏன் எழுந்துவிட்டாய்? ஸ்லோகம் சொல்வதையும் ஏன் நிறுத்திவிட்டாய்?''

ஸ்வர்ணா பேசவில்லை.

''நான் திடீர் என்று வந்ததால் நிறுத்திவிட்டாயே, எனக்கு மஹிஷாசுரமர்த்தினி ஸ்லோகம் என்றால் ரொம்பவும் பிடிக்கும்.''

அவளுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது.

''அமெரிக்கன் ரிட்டர்ண்ட் நீங்கள். எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறதே. உங்களுக்கு ஸ்லோகம் பிடிக்குமா?''

''அம்மாவை வேண்டுமானால் கேள். சின்ன வயதில் அம்மா பாடும்போது நானும் கூடப் பாடுவேன். மீதியையும் நீ பாடு. நான் கேட்கிறேன்.''

அவள் நின்றுகொண்டே பாடினாள்.

''நீயும் உட்கார். நானும் உட்காருகிறேன்.

அவள் உட்கார்ந்தாள். அவனும் சற்றுத் தள்ளி எதிரே உட்கார்ந்தான்.

அவள் தொடர்ந்தாள். ஞாபகம் வந்த இடங்களில் அவனும் சேர்ந்து கொண்டான்.

ஸ்லோகம் முடிந்தது. அவள் கற்பூரம் காட்டினாள். பிறகு அவனிடம் கற்பூரத் தட்டை நீட்ட அவனும் ஒற்றிக்கொண்டான்.

அவள் தட்டை நகர்த்தினாள்.

''இன்னும் கொஞ்சம் ஒற்றிக்கொள்கிறேன்'' என்றான் அவன்.



# ஸ்வர்ணா

ஸ்ரீவத்ஸன்

"இது என்ன ஸ்வாமி பிரசாதமா? இரண்டாம் தடவை கேட்பதற்கு?" சிரித்தபடி நீட்டினாள்.

அவன்கற்பூர ஜோதியை இரண்டு கைகளாலும் அணைத்து ஒற்றிக் கொண்டான். வாசற்படியைப் பார்த்தான். யாரும் வரவில்லை. உடலில் ஒரு விதப் பதற்றம்.

அடுத்த நிமிடம் ஒரு கையை அவள் கண்களில் ஒற்றினான். அவள் அதை எதிர்பார்க்கவில்லை. ஆனால் அந்த ஸ்பரிசம் அவள் உடலைச் சிலிர்க்க வைத்ததை அவனும் உணர்ந்தான்; அவளும் உணர்ந்தாள்.

கற்பூரத் தட்டை வைத்து விட்டு அவள் விடுவிடுவென அறைக்கு வெளியே வந்து விட்டாள்.

நல்லவேளை. எஜமானியம்மாள் பாடலீசுவரர் கோயிலுக்கு வெள்ளிக்கிழமை என்று போனவள் திரும்பி வரவில்லை.

எட்டு மணிக்குச் சங்கு ஊதும் வரை சமையல் அறையை விட்டு அவள் வரவில்லை.

ராகவன் மாடியில் ஐரோப்பிய சங்கீதம் வைத்துக் கொண்டிருப்பது காதில் விழுந்தது.

கோவிலுக்குப் போன பார்வதி அம்மாள் வந்துவிட்டாள் தன் கணவர் கோவிந்தனுடன்.

எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். ஸ்வர்ணா பரிமாறினாள்.

"அம்மா, ஸ்வர்ணா எவ்வளவு அழகாக மகிஷாசுரமர்த்தினி ஸ்லோகம் பாடுகிறாள் தெரியுமா?"

"ரொம்ப நன்றாய்ப் பாடுவாளே! அன்னபூர்ணாஷ்டகம் சொன்னால் இன்னிக்கு முழுக்கக் கேட்கலாம். வயது பதினேழுதான். ஆனால் தெரிஞ்சிருக்கும் ஸ்தோத்திரங்கள் ஆயிரம்."

"கேள்வி ஞானம் போலிருக்கு."

"பத்து வயதுப் பெண்ணாயிருந்தபோது நான் கிராமத்திலிருந்து அழைத்து வந்தேன். அப்போ எதுவுமே தெரியாது. கண்ணைத் திறன்னா வாயைத் திறப்பாள். வாயைத் திறன்னா மூக்கைத் திறப்பாள். எல்லாம் நான் சீர்திருத்தினதால்தான் இவள் இப்படி ஆகி இருக்காள். இல்லையா ஸ்வர்ணா?"

"ஆமாம். ஒரு வேளைச் சாப்பாட்டுக்குச் சித்தியிடம் சித்திரவதைப் பட்டேன். ஒரு வருடத்துக்கு முன்பு என் அதிர்ஷ்டம் உங்க கண்ணிலே பட்டேன். இப்ப நான் இப்படி இருப்பதற்கு நீங்கதான் காரணம்."

"சமையல்கூட நளபாகம் அம்மா."

"ஸ்வர்ணா சம்பந்தப்பட்ட மட்டில் எல்லாமே ஸ்பெஷல்தான்."

சாப்பாட்டுக் கடை முடிந்தது.

மொட்டை மாடியில் ராகவன், பார்வதி, அவள் கணவன் எல்லோரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அன்று காலையில்தான் ராகவன் அமெரிக்காவில் இருந்து வந்தான்.

"ஏழு வருட காலம் எப்படியம்மா என்னைப் பிரிஞ்சு இருக்க முடிந்தது!"

"சீதா தேவி கானகத்தில் ராமரைப் பிரிந்து இருக்கவில்லையா? கௌஸல்யா தேவி ராமனைப் பிரிந்து இல்லையா? பெரிய படிப்புப் படிக்க நீ அமெரிக்கா போகணும்னு துடித்த போது பெற்ற பாசத்தைக் காட்டி உன்னைத் தடுத்து உனக்கு வரும் அதிர்ஷ்ட தேவதையை நிறுத்த மனமில்லை. பாசத்தை அடக்கிக் கொண்டேன். ஏழு வருடங்கள் எழுபது வருடங்களாய் இருந்தன."

"இனிமே உன்னை விட்டுப் போக மாட்டேன் அம்மா."

"சரி. நீ படுத்துக் கொள். இன்றுதான் ஊரிலேயிருந்து வந்தாய். சிரமமாய் இருக்கும்." அவன் அம்மாவும் அப்பாவும் கீழே போய் விட்டார்கள்.

அதே ஊரில்தான் அவன் பிறந்தது. படித்தது எல்லாம். 'நான் ஸெண்ட் ஜோசப் பள்ளி மாணவன்' என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுவான். எஸ். எஸ். எல். ஸி. யில் ராஜதானியிலேயே முதலாவதாய்த் தேறிய அவனுக்கு ராஜதானிக் கல்லூரி அழைப்பு அனுப்பியது.

படித்துப் பட்டம் பெற்றான்.

பி. ஏ. பாஸானபோது வயது இருபது.

மகனுக்குக் கலியாணம் செய்து பார்க்க விரும்பியபோதுதான் இந்திய சர்க்காரால் அமெரிக்காவில் மேற் படிப்புக்காக ஏழு வருட காலத்துக்குப் போக விருப்பமா என்று கேட்டுத் தகவல் வந்தது. ராகவன் போகத் துடித்தான்.

தாய் அவனைப் பிரிய மனமில்லாமல் விடை கொடுத்தாள். அதன் பின்பு ஏழு வருட காலம் அமெரிக்காவில் இருந்து விட்டு ஒரு வாரம் முன்பு புறப்பட்டு டில்லி வந்து சென்னைக்கு முதல் நாள் இரவு வந்துவிட்டு இன்றைய விடியற்காலையில்தான் பார்ஸலில் வந்து இறங்கினான்.

வீட்டுக்குள் நுழைந்த ராகவனை அவன் அம்மா மிகுந்த பாசத்துடன் வரவேற்றாள்.

"நீ பல்லைத் தேய், ராகவா. காப்பி சாப்பிடலாம்" என்று சொல்லி அவனைப் பாத்ரூமுக்கு அழைத்துப் போனாள்.

பல் தேய்த்ததும் கூடத்துச் சோபாவில் வந்து உட்கார்ந்தான்.

"ஸ்வர்ணா, காப்பி கொண்டா" என்று கூறியபடி எதிர் சோபாவில் உட்கார்ந்தாள் பார்வதி அம்மாள்.

அப்போது தான் ஸ்வர்ணா காப்பியை வெள்ளிடம்ளரில் கொண்டு வந்து வைத்தாள்.

ராகவன் அயர்ந்து போய்விட்டான். அழகு ஓவியம் ஒன்று அஜந்தாவிலிருந்து எப்போது தன் வீட்டுக்கு வந்தது என்று திகைத்தான்.

அவன் மனத்துக்குள் ஸ்வர்ணா என்று ஒரு தடவை சொல்லிக் கொண்டபோது அவன் நாவு இனித்தது; மனம் குளிர்ந்தது.

"யாரம்மா இது?"

"ஸ்வர்ணாவைத் தெரியாதா? நம்ம ஊர் ஜோஸ்யர் ராமுடு பாகவதரின் மூத்தாள் பெண். ஏழு வருடங்களுக்கும் முன்பு கிராமத்துக்குப் போனேன். பாகவதர் இளையாள் இந்தப் பெண்ணைப் படுத்தி வைக்கும் பாட்டைப் பார்த்து என் கண்களில் ரத்தமாய் வந்தது. வீட்டு வேலைக்கு வேண்டும், அனுப்ப முடியுமா என்று கேட்டேன் பாக

வதரை. அனுப்பினார். அது முதல் என்னிடம் தான் அவள் இருக்கிறாள்.''

ராகவனுக்கு இப்போது ஏதோ கொஞ்சம் ஞாபகம் வந்தது போல் இருந்தது.

கிராமத்தில் அவன் தாத்தா வீட்டுக்குப் போகும் போது அடுத்த வீடான ஜோஸ்யர் வீட்டுக்குப்போய் விளையாடுவ துண்டு. அப்போது மூக்கை யெல்லாம் ஒழுக விட்டுக் கொண்டு கொத்தவரங்காய்ப் பின்னலுடன் நின்ற பெண்தான் ஸ்வர்ணு.

அவளா இப்போது இந்திரலோக மங்கையாகி விட்டாள்?

அதன்பின் அவன் சமையல் கட்டிற்கே வந்து உட்கார்ந்தபடி அம்மாவிடம் பேசுவது போல் ஸ்வர்ணுவிடம் பேசினான்.

முதலில் அவள் வாயைத் திறக்கவேயில்லை.

''நான் வெங்காயம் தோல் உரிக்கட்டுமா, அம்மா?''

''கண் எரியும். வேண்டாம். நானும் ஸ்வர்ணுவும் உரித்து விடுவோம்.''

''ஸ்வர்ணு ஊமையா அம்மா?''

''ஊமையா? யார் சொன்னது? திறந்த வாய் மூட மாட்டாளே! உன் எதிரில் பேசக் கூச்சம். ஆமாம், ஏண்டி பெண்ணே? ஏன் வாயடைக்கப் போச்சு? நம்ம ராகவன் தானே அன்னியனா என்ன?''

அதன் பின்னால் ஸ்வர்ணு கலகலவென்று பேசினாள்.

**அ**ன்று மாலை.

பார்வதி யம்மாள் அவள் கணவன் இருவரும் கிளம்பினார்கள் கோவிலுக்கு.

''நீயும் வாயேன், ராகவா.''

''அலுப்பாய் இருக்கு அம்மா. நானெக்குப் போகிறேன்.''

''சரி, சரி. ரெஸ்ட் எடுத்துக்கோ.''

அவர்கள் போய் விட்டார்கள். ஸ்வர்ணுவிடம் உரையாடவே அவன் அலுப்பாய் இருப்பதாகக் காரணம் காட்டிக் கோவிலுக்குப் போகவில்லை.

விளக்கு வைத்தது.

ஸ்வர்ணு மகிஷாசுரமர்த்தினி ஸ்லோகம் சொல்லிக் கொண்டிருந்தபோது ராகவன் வலிய வந்து பிறகு கற்பூரத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டு ஸ்வர்ணு கண்களிலும் ஒற்றினான். தன் கைகளை ஒரு தடவை எடுத்து முத்தமிட்டான்.

அன்றிரவு முழுதும் அவன் இன்பக் கனவில் மூழ்கிக் கிடந்தான்.

மறு நாள் விடியற்காலை. எழுந்து பாத்ரூம் போய் விட்டுச் சமையல் உள்ளே வந்தான். அவன் கண்கள் ஸ்வர்ணுவைத் தேடின.



''ரயில், பஸ்களில் அடிக்கடி விபத்துக்கள் ஏற்படுகின்றனவே! அதற்காக, முன் ஜாக்கிரதையாகச் சில நடவடிக்கைகள் எடுத்திருக்கிறோம்.''

''பலே! என்ன அப்படி?''

''காலமானவர்களுக்கும், காயமடைந்தவர்களுக்கும் அநுதாபம் தெரிவித்துக் கடிதம் டைப் செய்து வைத்திருக்கிறோம்.''

''உட்காரு ராகவா! இதோ ஒரு நொடியில் காப்பி ஆயிடும்.''

''நீ ஏனம்மா போடு கிறாய்? ஸ்வர்ணு எங்கே?''

''அவள் இன்னிக்கு வரவில்லே.''

''வரவில்லே என்றால்? அவளும் நம் வீட்டில்தானே இருக்கிறாள்?''

''இரண்டு வருடங்களுக்கு முன்பு வரை நம் வீட்டில் தான் என் பக்கத்திலேயே தான் படுத்துக் கொண்டிருந் தாள். அவள் அழகு எனக்கே பயமாய் இருந்தது. உங்கப்பாவும் அவகிட்டே சதா பல்லைக் காட்டிக் கொண்டிருந்தார். அப்புறம் விஷயம் மிஞ்சிவிடக் கூடாதே என்று நானே பார்த்து அவளுக்கு மணம் செய்துவைத்து விட்டேன். பத்து வீடுகள் தள்ளிப் புருஷனோட இருக்கிறாள். விடியக் காலம் ஐந்து மணிக்கு வருவாள். ராத்திரி எட்டு மணிக்கு வீட்டுக்குப் போய்விடுவாள்.

ராகவனை யாரோ ஆக்ரோஷத்துடன் கக்கும் எரிமலையில் கைகால்களைக் கட்டிப் போட்டது போல் இருந்தது. இந்தச் செய்தி காதில் செய்தியாக விழவில்லை. ஈயத்தைக் காய்ச்சி ஊற்றியது போல் இருந்தது.

ஸ்வர்ணு மணமானவளா? தான் கட்டிய கோட்டை இப்படியா ஒரு நொடியில் சரிய வேண்டும்?

அதன் பின் அவன் வாழ்க்கையே பாழாகி விட்டது போல் உணர்ந்தான்.

மறு நாள் ஸ்வர்ணு வந்தாள்.

''எப்படி இருக்கிறது உன் கணவனுக்கு?''

''இப்போது தேவலை, மாமி!''

ராகவன் அன்று அதிகக் கலகலப்பாய் இல்லை. ஸ்வர்ணுவுக்கு அது ஏன் என்று புரியவில்லை.

**வா**சலில் நின்று கொண்டிருந்தான் ராகவன்.

ஒரு வயதான கிழம் தொந்தியும் தொப்பையுமாய்க் குள்ளக் கத்திரிக்காய் போல் மிகவும் அருவருப்பான தோற்றத்துடன் வீட்டுப் படி ஏறி வந்தது. நிறம் வேறு கறுப்பு. வெளியே விழுந்து விடுமோ என்று சொல்லும்படி கண்கள் தொத்திக் கொண்டிருந்தன.

''யார் நீர்?'' ராகவன் கேட்டான்.

''ஹி ஹி... என்னைத் தெரியாதா? பார்வதியம்மா பிள்ளைதானே நீங்க?''

''ஆமாம். நீர் யார்?''

''நானா.... பார்வதியம்மாவைக் கூப்பிடுங்கோ. சொல்லுவாள்!''

''அம்மா!'' என்று குரல் கொடுத்தான் ராகவன்.

''என்ன ராகவா?'' என்று கேட்ட பார்வதி, ''என்னங்காணும் சுப்பண்ணா! ஆம்படையானைத் தேடிண்டு வந்துவிட்டீரா?

''ஆமாம், அம்மா! ஸ்வர்ணாவைப் பத்து நிமிடம் அனுப்புங்கோ.''

''தாராளமாய்!''

பார்வதி உள்ளே போய் விட்டாள்.

ராகவன் தலையில் இடி இறங்கியது போல் இருந்தது. மாமிச பர்வதமான இந்தக் கிழமா கட்டழகி ஸ்வர்ணாவின் கணவன்?

அவனால் ஸ்வர்ணா விவாகமானவள் என்பதையே பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதை அவன் பொறுத்துக் கொள்ள முடியாமல் தவிக்கும் போது இப்படிப்பட்ட அவலட்சண மாமிச பர்வதம் அவள் கணவன் என்பதை எப்படிப் பொறுக்க முடியும்?

ஸ்வர்ணா வெளியே வந்தாள். ராகவன் நின்ற இடத்துக்கு அருகில் வந்து ஒரு நிமிடம் நின்றாள். ராகவன் வழியில் நின்றிருந்தான். வழியை விட்டான். அவள் போய் விட்டாள்.

''ஏனம்மா!''

''என்னடா, ராகவா?''

''இதுவா ஸ்வர்ணாவின் கணவன்?''

''ஆமாம்.''

''நீதானே பார்த்து மணம் செய்து கொடுத்தாய்?''

''ஆமாம்.''

''ஸ்வர்ணா உன் பெண்ணாயிருந்திருந்தால் நீ இப்படிப்பட்டவனுக்கு அவளைக் கொடுத்திருப்பாயா?''

''இது நாமாகச் செய்யறதில்லே ராகவா. பகவான் போட்ட முடிச்சு அப்படி. தவிரவும் அவளுக்கு என்ன பெரிய அமெரிக்கன் ரிட்டர்ண்டா கிடைப்பான்? ஏழைக்குத் தக்கன என்னாருண்டோ.''

ராகவன் மனத்தில் சொல்லிக் கொண்டான்: ''அமெரிக்கன் ரிட்டர்ண்ட்' எல்லாம் இவளை அடையக் கொடுத்து வைச்சிருக்கணும். எனக்குக் கிடைக்குமா இப்படிப்பட்ட அழகி? அவள் தலையில் எழுத்து இப்படி!

ஒரு மாத காலம் எப்படி எப்படியோ ஓடி விட்டது.

தன் மகன் ஒரு பெரிய படிப்புக்காரன். அவன் மனம் சமையல்காரியான ஸ்வர்ணாவினிடம் ஈடுபடாது. அப்படியே ஈடுபட்டால் கூட அவள் விவாகமானவள் என்பதால் மகன் அவளைப் பற்றியே நினைக்க மாட்டான் என்று பார்வதி நினைத்தாள்.

ஆனால் அவள் கண்டாளா, மகன் எப்போதுமே அவளைப் பற்றிய நினைவாகவே இருக்கிறான், அவன் உள்ளத்தில் ஒரு பெரிய புயல் வீசிக் கொண்டிருக்கிறது என்பதை.

ஸ்வர்ணா.

அவள் மன நிலை?

வீட்டுக்கு இரவு போனதும் வெட்டிச் சாய்ந்து கிடக்கும் மரம் போல் கிடக்கும் கணவனை எழுப்புவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிடும். சில சமயம் எழுப்ப முடியாமல், அவள் மட்டும் சாப்பிட்டுவிட்டுப் படுப்பாள். அப்புறம் தூக்கம்தான்.

அவருக்குச் சாப்பாடு போட்டுவிட்டு அவள் படுத்துக் கொண்டால் அவள் நினைவிலேயே நின்றுகொண்டு அவள் மனத்தை அலைக்கழித்தான் ராகவன்.

**தந்திரக் கணக்கு விடை:** நீங்கள் உங்களது பத்து மூட்டைகளையும் முறையே 1 2 4 8 16 32 64 128 256 489 ஆக நிரப்புங்கள். இவற்றைக் கூட்டினால் ரூ. 1000 வரும். உங்கள் நண்பர் கேட்ட 729 ரூபாய்க்கு நீங்கள் 489 ரூபாய் மூட்டை 128 ரூபாய் மூட்டை, 64 ரூபாய் மூட்டை, 32 ரூபாய் மூட்டை, 8 ரூபாய் மூட்டை, 4 ரூபாய் மூட்டை, 2 ரூபாய் மூட்டை, 1 ரூபாய் மூட்டை ஒவ்வொன்று கொடுத்தால் ரூ. 728 ஆகும்.

உங்கள் நண்பர் கேட்ட 7 ரூபாய்க்கு 4 ரூபாய் மூட்டை ஒன்று, 2 ரூபாய் மூட்டை ஒன்று, 1 ரூபாய் மூட்டை ஒன்று. ஆக ஏழு ரூபாய்.

இதே போல் மற்றதையும் செய்து பாருங்களேன்.

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

கன்னி என்ற பட்டத்தைத் துறந்தாள். மனைவி என்ற பட்டத்தைப் பெற்றதைத் தவிர அவள் எதையுமே கண்டதில்லை.

சமயம் கிடைத்தபொழுதெல்லாம் ராகவனைத் தன் ஓரக் கண்களால் பார்த்துப் பார்த்து ஏங்கினாள்.

அன்று. அவன் அம்மாவும் அப்பாவும் யார் வீட்டிலோ நிச்சயதார்த்தத்துக்குப் போய்விட்டார்கள். வீட்டில் ஸ்வர்ணாவும் ராகவனுமே இருந்தனர்.

ஸ்வர்ணா கூடத்தில் உட்கார்ந்தபடி மல்லிகைப் பூ தொடுத்துக் கொண்டிருந்தாள்.

''ஸ்வர்ணா.''

எழுந்து நின்றாள்.

''தெய்வம் சதி செய்து விட்டது ஸ்வர்ணா.''

''அப்படியா?''

''உன்னை அடைய முடியாதபடி சதிசெய்து விட்டதே. நீ இல்லாமல் எப்படி வாழ்வேன்?''

''நானும் கொடுத்து வைக்காத பாவி'' என்று விம்மினாள்.

நீண்ட நேரம் பேசியபின் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

மறு நாள் விடியற்காலம். போட்மெயிலில் இருவரும் யாரும் அறியாமல் புறப்பட்டுப் போய் விடுவது. சென்னை போய் ரிஜிஸ்தர் கலியாணம் செய்து கொண்டு, தில்லிக்குப் போய் விடுவது. அதன்பின் இந்தப் பக்கம்கூடத் தலை வைத்துப் படுக்கக் கூடாது!

அவள் அழகுக்காகத் தன் பெற்றோரைத் துறக்கத் தயாராய் இருந்தான் அவன்.

அவளோ அவன் மீது கொண்ட காதலால் கணவனையே துறக்கத் தயாராய் இருந்தாள்.

கடைசியில் அவர்கள் பேசிக் கொண்டார்கள். ராகவன் சொன்னான். ''விடியற்காலம் நான்கு மணிக்குப் போட்மெயில். ஆஞ்சநேயர் கோயில் அருகில் இருப்பேன். நீ வந்து விடு.''

''கண்டிப்பாய்.''

பத்து நிமிடங்கள் ஆனபின் அவன் பெற்றோர் வந்து விட்டார்கள்.

பசிக்க வில்லை என்று ராகவன் படுத்துக் கொண்டான். கிடைத்தற்கு அரிய பொக்கிஷம் ஸ்வர்ணா அவன் மனைவியாகப் போகிறாள் என்ற சந்தோஷத்தில் அவனுக்கு எதிலுமே ஓர் அபிலாஷை இல்லை.

வீட்டுக்குப் போன ஸ்வர்ணாவும் சந்தோஷத்தால் நிலைகொள்ளாது தவித்தாள். இரண்டு வருடங்களாய் அநுபவித்திராத ஓர் இன்ப நிலை.

புரண்டு புரண்டு படுத்தாள். சற்றுத் தள்ளி அவள் கணவன் படுத்திருந்தான்.

விடியற்காலம் நான்கு மணி எப்போது வரும் என்று அவள் தவித்தாள்.

பாடலீசுவரர் கோயிலில் மணி பன்னிரண்டு அடித்தது. ஆயிற்று. இன்னும் நான்கு மணி நேரம் போனால் அவள் அப்புறம் சொர்க்கலோக வாழ்வில் நுழையப் போகிறாள். நிலைகொள்ளாது தவித்தாள்.

பெட் ரூம் விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. யாரோ தன் அருகில் வந்து உட்கார்ந்ததுபோல் தெரிந்தது அவளுக்கு.

திரும்பிப் பார்த்தால், அவள் கணவன்.

அவள் திடுக்கிட்டாள். அவள் அருகில் அவர் என்றுமே வந்ததில்லை. அவள் கூடத்தில் படுப்பாள், அவர் வாசற்படியில் தலை வைத்துப் படுப்பார். இன்று ஏன் இப்படி அருகில் வந்து உட்கார வேண்டும்?

தூங்குவது போல் பாசாங்கு செய்தாள்.

அவள் கணவன், ''பாவம், ரொம்பக் கஷ்டம். மாடு மாதிரி வேலை செய்து விட்டு வரா'' என்று சொல்லியபடி விசிறியால் அவளுக்கு விசிறினார். மேல் துண்டை எடுத்து அவள் நெற்றியைத் துடைத்தார்.

அவளுக்கு அவர் விசிறியும் வியர்த்தது.

மெதுவாய் அவள் காலைப் பிடித்து விட்டார். அவள் எழுந்தே விட்டாள். ஒன்றும் புரியவில்லை.

''என்ன இதெல்லாம்?'' கோபமாகவே கேட்டாள்.

''கோவிச்சுக்காதே, ஸ்வர்ணா! என் மனத்தில் பட்டதைச் சொல்லுகிறேன். நான் உன்னை மணந்திருக்கவே கூடாது.''

அவள் திடுக்கிட்டாள்.

கணவனுக்குத் தான் செய்யப் போகும் துரோகம் எப்படித் தெரிந்தது? அவர்தான் வெறும் ஜடம் ஆயிற்றே. திடுக்கிட்டாள் ஸ்வர்ணா.

அப்படி ஏதாவது கணவன் தெரிந்து கொண்டு கேட்டால் கடச்கட அவரிடம் கேட்டுவிட்டு, ''ஆமாம், நான் ராகவனுடன் ஓடத்தான் போகிறேன்'' என்று அவர் எதிரிலேயே விஷயத்தை உடைத்துச் சொல்லிவிடத் தன்னைச் சுதாரித்துக் கொண்டாள்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''ஸ்வர்ணா! நான் பிறந்திருக்கவே கூடாது. நான் ஒருவன் பிறந்ததால்தானே நீ என்னை மணம் செய்து கொள்ளும்படியாகி விட்டது. நான் பிறக்காமல் இருந்திருந்தால்....?

''தெய்வம் சதி செய்து விட்டது ஸ்வர்ணா. உன் அழகு எங்கே? என் அவலட்சணம் எங்கே? நான் உனக்கு ஏற்றவனா? இவ்வளவு நாள் நான் அதை நினைத்துப் பார்க்கவேயில்லை. ஒரு மாதத்துக்கு முன்பு உன்னைத் தேடி உன் எஜமானி வீட்டுக்கு வந்தேன் அல்லவா? அப்போது நீ வாசல் பக்கம் வந்து ஒரு நிமிஷம் நின்றாய். கொஞ்சம் தள்ளி ராகவன் நின்று கொண்டிருந்தான். உங்கள் இரண்டு பேரையும் சேர்த்து மனத்தில் எண்ணிப் பார்த்தேன். மன்மதனையும் ரதியையும் சேர்த்துப் பார்த்தது போல் இருந்தது.

''கடவுள் உன்னையும் அவனையும் கணவனும் மனைவியுமாக ஆக்கியிருந்தால் எவ்வளவு நன்றாய் இருந்திருக்கும் தெரியுமா? இரண்டு வெள்ளிக் குத்துவிளக்குகள் சேர்ந்து எரியும்போது எப்படிக் கண்ணுக்குக் குளிர்ச்சியாய் இருக்கும் தெரியுமா? அதைவிட்டு வெள்ளிக் குத்து விளக்குக்குப் பக்கத்தில் திவட்டியை வைத்து எரிய விட முடியுமா?

''என்னைக் கலியாணம் செய்து கொண்டாயே, ஒரு நல்ல புடவை உண்டா, நகை உண்டா? நீயே உன் வயிற்றுக்குச் சம்பாதித்துக் கொண்டு வருகிறாயே ஒழிய என்னால் உனக்கு எதுவுமே செய்ய முடிகிறதா? இளவரசன் உன் அழகுக்குக் கணவனாக வாய்த்திருக்க வேண்டும். நானோ சவுண்டி சாப்பிடும் உத்தியோகம். அது என்னவோ ஸ்வர்ணா, உன் அழகுக்கு இந்த அவலட்சணம் வந்து வாய்த்ததே அது விதியின் கொடுமை.

''அதை நினைத்து நினைத்து என் மனம் வேதனைப்பட்டு மாய்கிறது. நான் உனக்குக் கணவனாக வந்தது மிகவும் கொடுமை. அடுத்த ஜன்மத்திலாவது உனக்கு நல்ல அழகான கணவனாக வாய்க்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். என்னை மன்னித்து விடம்மா ஸ்வர்ணா!'' இதைச் சொல்லிவிட்டு அவர் தேம்பித் தேம்பி அழுதார்.

ஸ்வர்ணாவின் மூளையில் ஓர் அதிர்ச்சி. அவளைப் பற்றி அவள் கணவன் கொண்டுள்ள உன்னதமான அபிப்பிராயம், அவருடைய பெருந்தன்மை, அவளை அப்படியே சுட்டு எரித்துவிட்டன. கணவன் தன்னிடம் வெளிப்படையாய் மனம் புழுங்கிச் சொன்னதைவிட அவளை அணு அணுவாய்ச் சித்திரவதை செய்திருந்தால்கூட அவளுக்கு இதமாய் இருந்திருக்கும். கணவனின் பெருந்தன்மை அவளை அப்படியே செயலற்றவளாக ஆக்கி விட்டது.

தான் செய்யவிருந்த ஈனத்தனமான காரியம் என்ன? அவள் கணவன் தன்னிடம் கொண்டிருக்கும் அன்பு என்ன?

அவள் கணவன் பேசிய பேச்சுக்கள் என்ற பெருநெருப்பில் அவள் புடம் போட்ட பொன்னாகி விட்டாள்.

இனி அவளை எந்த மன்மதனும் மயக்கிவிட முடியாது. அவள் மனம் உறுதிப்பட்டது.

தன் கணவனின் படுக்கையைத் தட்டிப் போட்டாள். அவரது அன்புக் கரங்களைப் பற்றினாள்.

அவள் மனம் எல்லையில்லாத ஆறுதலை அடைந்தது.

ஆஞ்சநேயர் கோயில் வாசலில் 'அவள் ஏன் இன்னும் வரவில்லை' என்று காத்துக் கிடக்கிறான் ராகவன்.

நீங்கள் அந்தப் பக்கம்தானே போகிறீர்கள்? ராகவனிடம் ஒரே ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போகிறீர்களா? என்ன சொல்ல வேண்டும் தெரியுமா?

'அவள் வரவே மாட்டாள்.'

IOC-123 TM

# குறையிலேயே கண் என்பது உண்மையே

ஆனால் தரக்குறைவான மாற்றுப் பொருளை ஏற்க மறுத்து, குறிப்பிட்ட மூலப்பொருளே வேண்டுமென வற்புறுத்த நேரும் போதுதான் அப்படிச் செய்கிறோம்

இல்லையேல், நிர்ணயித்த வகைகளில் இல்லாத எங்கள் தொழிற்சாலைகளின் தயாரிப்புகளையே நிராகரிக்க வேண்டிவரும் போதும் அவ்விதம் செய்கிறோம்

அல்லது, தரச்சீர்பாட்டுக்குத் தடையாகவுள்ள பழைய வழிகளில் ஈடுபடுவதை விடுத்து, எங்கள் பண்டங்களையும் செய்முறைகளையும் புதிய வகைகளில் பயன்படுத்தும்படி தொழில் துறையினருக்கு ஆலோசனை கூறுவது அவசியமாகும் சமயங்களில அம்மாதிரிச் செய்கிறோம்.

இன்றேல், எங்கள் த
சிப்புகளின் இறுதித்தர
தில் எங்களுக்கே ஐயம்
எழும்போது அவ்வாறு
செய்கிறோம்—இத்தகை
தரப்பரிசோதனையே
இடையறாது நடந்து வ
கிறது - ஆம், குற்றம்
காண்பதில் எங்களுக்கு
குறிதான் ...ஏன், ஒரு
யான வெறி என்று கூட
கூறலாம்.

இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் லிமிடெட் 



# வெற்று வெளி

ம.ந.ராமசாமி

“தியாகு!”

அக்காலை நேரத்தில் பெரிதாக மலர்ந்திருந்த அழகிய ரோஜா மலரைப் பார்த்துக் கொண்டிருந்த நான் திரும்பினேன். பங்களா வாசலில் கேசவமூர்த்தி நின்றிருந்தார்.

தும்பைப்பூ வெண்மையில் ஜிப்பா, கரை போடாத வேஷ்டி, முகத்தில் தடித்த கறுப்பு ஃப்ரேம் மூக்குக் கண்ணாடி, பரந்த நெற்றிக்கு மேலே பின்புறமாக வாரிவிடப்பட்ட கறுப்பும், வெளுப்புமான கிராப்பு, உயரத்துக்கு ஏற்ற பருத்த உடம்பு—இது கேசவமூர்த்தி.

அவர் அருகில் சென்றேன். அந்த பங்களாவை அண்டிய 'வெளி வீட்டில்' குடியிருப்பவன் நான்.

“தியாகு! இன்று வல்லியைப் பெண் பார்க்க வருகிறார்கள். நீயும் கூட இருந்து எனக்கு உதவி செய்ய வேண்டும்!” என்றார் கேசவமூர்த்தி.

“சரி, சார்! ஆபீசுக்கு லீவு கேட்டு எழுதி அனுப்பி விடுகிறேன். எத்தனை மணிக்குப் பெண் பார்க்க வருகிறார்கள்?”

“இன்று வெள்ளிக்கிழமை. பத்தரை முதல் பன்னிரண்டு வரை ராகுகாலம் இருக்கிறது. அதனாலே மத்தியானத்துக்கு மேலே வரச் சொல்லியிருக்கிறேன். லீவு போடாததனாலே உனக்குத் தொந்தரவு ஒன்றும் இருக்காதே?” என்று கேசவமூர்த்தி கேட்டார்.

“தொந்தரவு ஏதுவும் இருக்காது. ரொம்ப அவசியமானால் ஒழிய நான் லீவு எடுக்க மாட்டேன் என்பது ஆபீஸில் தெரியும். வல்லி கலியாணத்துக்கு நான் உழைக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.”

கேசவமூர்த்தி தொடர்ந்து சொல்லிக் கொண்டே போனார். “பையன் சப்-கலெக்டர்! பெரிய குடும்பம். தகப்பனார் விவசாய இலாகாவில் டெபுடி டைரக்டராக இருந்து ஓய்வு பெற்றவர். பையனின் மாமா செக்ரடேரியட்டில் பெரிய உத்தியோகத்தில் இருக்கிறார். இப்படி அவர்களைச் சேர்ந்தவர்கள் எல்லாருமே அரசாங்க உத்தியோகஸ்தர்கள். நான் தொழிலில் வியாபாரி. பண விவகாரத்தைப் பொறுத்த மட்டில் நான் அவர்களை விட எவ்வளவோ மேம்பட்டிருந்தாலும், லௌகிக காரியங்களில் மரியாதை தெரிவிப்பது எல்லாம் எனக்கு அவ்வளவாகப் போதாது. நீதான் இந்தச் சமயத்தில் மட்டுமல்லாது, கல்யாணம் நிச்சயித்தால், கூட இருந்து உதவி செய்ய வேண்டும்...!”

கேசவமூர்த்தி பேசுகையில் அவர் பார்வை எதிரே வெறும் வெளியில் தன்னந்தனியாக நிற்கும் ஒற்றைப் பனைமரத்தின் மீது நிலைத்திருந்தது.

“சரி, சார்! வல்லி கல்யாணத்தில் சாம்பார் பரிமாறும் வேலை என்னுடையது!” என்று கூறி நான் சிரித்தேன். கேசவமூர்த்தியும் சிரித்தபடியே என் முதுகைத் தட்டிக்கொடுத்தார்.

வீட்டினுள் நுழைந்து கொல்லைப்புறம் பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்த தாயாரிடம் சென்றேன். “அம்மா! இன்னிக்கு வல்லியைப் பெண் பார்க்க வருகிறார்களாம்!” என்றேன்.

“ஆமாம், நானே உன்னிடம் சொல்ல வேண்டுமென்றிருந்தேன். வல்லியின் அம்மா கௌசல்யா நேற்று சாயந்திரம் சொன்னாள். எத்தனை மணிக்குப் பெண் பார்க்க வருகிறார்களாம்?”

“மத்தியானத்துக்கு மேலே வருவார்கள். நான் ஆபீஸுக்கு லீவு எழுதப் போகிறேன். கேசவமூர்த்தி கூட இருக்கச் சொல்லியிருக்கிறார். அதனால் அவசரப் பட்டுக் கொண்டு சமையல் பண்ணவேண்டாம். பசிக்கிறபோது சாப்பிடுகிறேன்!” என்று கூறி நகர்ந்தேன்.

என் அறையினுள் ஜன்னல் ஓரமாகச் சாய்வு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தேன். புது மல்லிகையின் மணம் மென்மையாகத் தவழ்ந்தது. சுற்றுச் சுவர்களுக்குள் பங்களாவைச் சுற்றி ஒரே பூக்காடு தான். பங்களாவுக்கு எதிரே வெறும் வெளி. அது ஒரு பழைய பெரிய ஏரி. ஏரி இருந்த இடத்தில் சிறிது நீர் தேங்கிக் குளமாக நிற்கிறது. ஒரே ஓர் ஒற்றைப்பனை மரத்தைத் தவிர கண்களுக்கு எட்டிய தொலைவு வரை பசுமையற்ற பொட்டல் வெறும் வெளி. நிலம் தூரத்தில் சற்றே உயர்ந்து மறைந்து போகிறது. ஒவ்வொரு மாலையிலும் செந்நிறத்தில் கதிரவன் நெருப்புப் பந்தாகச் சுருண்டு கொண்டு, “போய் வருகிறேன்!” என்று சொல்லி விட்டுப் போவது போல் கண்களுக்கு முன்னால் அஸ்தமிக்கும்.

பன்னிரண்டு வருடங்களாக அவ்வப் பொழுது மாலை நேரங்களில் இப்படி அமர்ந்து அந்த வெறும் வெளியையும் மறையும் சூரியனையும் பார்த்துக் கொண்டிருப்பது எனது பொழுதுபோக்கு.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் அந்த ஊருக்கு வந்து வேலையில் சேர்ந்ததும், உடனேயே வீடு தேடப் புறப்பட்டதும், போன இடத்தில் இந்த வல்லியைச் சந்தித்ததும், மனத்தில் அப்படியே படம் மாதிரி நின்றது.

இன்று கல்யாணத்துக்கு நிற்கிறாளே, இந்த வல்லி, காம்பௌண்டுக் கதவைப் பிடித்தபடி சாலையைப் பார்த்துக் கொண்டு அன்று சின்னஞ் சிறு சிறுமியாக நின்றிருந்தாள். திறந்திருந்த கதவுக்கு அப்பால் பூட்டப்பட்டிருந்த 'வெளி வீடு' என் கண்களில் பட்டது.

“பாப்பா! வீடு ஏதாவது இங்கே காலியாக இருக்கிறதா?” என்று வெளி வீட்டுக் கதவிலிருந்த பூட்டைப் பார்த்தவாறு கேட்டேன்.

“வீடு காலியாக இல்லையே, மாமா! நாங்க தான் இங்கே இருக்கோமே!” என்றாள் அந்தக் குழந்தை.

''நான் பங்களாவைக் கேட்கவில்லை, பாப்பா! இதோ பூட்டுத் தொங்குகிறதே, அந்த வீட்டைக் கேட்கிறேன்.''

''அதுவா, அது....இருங்கோ, மாமா! அப்பாவை... இல்லே...அப்பா இன்னும் வெளியிலேருந்து வரலே... அம்மாவைக் கேட்டுவிட்டு வந்து சொல்கிறேன்!'' என்று கூறி அந்தச் சிறு பெண் உள்பக்கம் ஓடினாள்.

நான் காம்பவுண்டுக் கதவைப் பிடித்தபடி சுற்று முற்றும் பார்த்தேன். என் பிற்கால வாழ்க்கையை அந்த வெளி வீட்டுடன் பிணைத்துக் கொள்ள எண்ணினேன். திருமணத்துக்குக் காத்திருக்கும் ஒரு தமக்கை, காத்திருக்கப் போகும் ஒரு தங்கை, விதவைத் தாயார், நான் இந்த நால்வரைக் கட்டிக் காக்கப்போதுமா இந்த வீடு என்ற சிந்தனையில் மூழ்கினேன். அன்றையப் பிரச்னைகள் பல மலைகளாக என்மீது சுமத்திருந்தன. எவ்வாறு அந்த மலைகளை ஒவ்வொன்றாக இந்த நாட்களில் இறக்கி வைத்தேன் என்பதைத் திரும்பச் சிந்தித்துப் பார்க்கும்போது மலைப்பாக இருக்கிறது.

உள்ளே ஓடிய சிறுமி திரும்பி ஓடி வந்தாள். ''உள்ளே வாங்கோ மாமா! காரியஸ்தர் உங்களுக்கு வீட்டைக் காட்டுவார்'' என்று கூறி அவள் கதவுகளை அகலத் திறந்து விட்டாள். அன்று கதவுகளை அகலத்திறந்த அந்தச் சிறுமி என் மனத்துள் ஆழப் பதிந்து கொண்டாள்.

வீடு பிடித்திருந்தது. சாவியை வாங்கிய பிறகு, அன்றே தாயாருக்குக் கடிதம் எழுதி விட்டேன். நான்கு நாட்களுக்குப் பிறகு அலுவலகத்தில் ரஜா பெற்றுக் கொண்டு, ஊருக்குச் சென்று தாயையும், சகோதரிகளையும் அழைத்து வந்தேன்.

ஆண்டுகள் பகடைகளாக உருள, சகோதரிகளுக்குத் திருமணம் நடந்து, அவர்களும் கணவன்மார்களுடன் நன்றாக வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.

கேசவமூர்த்தி வீட்டை மட்டும் எனக்குக் கொடுக்கவில்லை. என் சகோதரிகளின் இரு மணத்தின்போதும் தேவையான சமயத்திலும் கடனுதவி செய்து ஆதரித்தார். கைநிறைய இன்று சம்பாதிக்கிறேன் என்றாலும் இரு மணங்களுக்கும் அதன்பின் நேர்ந்த சிறப்பு வைபவங்களுக்கும், பின்னைப் பேறுகளுக்கும் பெற்ற கடனை ஈடுசெய்ய வருவாயில் ஒரு பகுதி இன்றுவரை சென்று கொண்டேயிருக்



றது. வாங்கிய கடனை மாதாமாதம் அடைப்பது பழக்கமாக ஆகிவிட்ட ஒரு காரியம். கையில் பணத்தை மீதம் வைத்துக் கொண்டு தான் நான் என்ன செய்யப் போகிறேன்?

நான் திருமணம் ஆகாதவன். ஏன் செய்து கொள்ளவில்லை என்று யாரும் கேட்கவில்லை. யாரும் கேட்கக்கூடாது. கேட்டுப் பயனில்லை. ''எனக்கென்று ஒருத்தி பிறக்கவில்லை'' என்று தான் நான் கூறும் பதில். என் சகோதரிகளும் அவர்களுடைய கணவன்மார்களும் பெண் தேட முயன்றனர். எதுவும் திகைந்து வரவில்லை. அவ்வளவுதான். சொல்லப்போனால், ஒரு பெண்ணைக்கூட நான் போய்ப் 'பெண்' பார்த்ததில்லை. அந்த அளவுக்குக் கூட என் திருமண காரியத்தில் முன்னேற்றம் இல்லை. தாயார்கூட இந்தக் கவலையை இப்பொழுது விட்டுவிட்டாள். இல்லை, அது அவள் உள்ளத்தில் பனிக்கட்டியாக உறைந்து விட்டது.

இப்பொழுது எனக்கு வயதாகிவிட்டது. நாற்பதைக் கடந்து கொண்டிருக்கிறேன். வாழ்க்கையைப் பின்நோக்கிப் பார்த்தால் அப்படி ஒன்றும் உப்புச் சப்பில்லாத வாழ்க்கை வாழ்ந்துவிட்டதாகத் தோன்றவில்லை. நன்றாக உழைத்திருக்கிறேன். கடமையைச் சரிவர ஆற்றியுள்ளேன். தனக்கென்று ஒரு வாழ்க்கை வகுத்துக் கொள்ளாமல், பிறருக்காகவே வாழ்ந்து விடுவதிலும் ஓர் ஆத்ம திருப்தி இருக்கத்தான் செய்கிறது.

இந்த இடத்துக்குக் குடி வந்த புதிதில்தான் லல்லி சின்னஞ் சிறு சிறுமியாக என்னுடன் எப்படி இழைந்தாள்! காலையில் தோட்டத்தில் மலர்களோடு மலராகத் தானும் இருந்து கொண்டு, ''மாமா, மாமா, தூங்கிண்டு இருக்கேளே, எழுந்து வந்து இந்தச் சூரியகாந்தி எத்தனை பெரிசாகப் பூத்திருக்கு, பாருங்கோ!'' என்றுகூவுவாள். ''மாமா! இந்தப் பறவையைப் பாருங்கோ, புதுசா இருக்கு! இதுக்கு என்ன பேரு மாமா?'' என்று கேட்பாள். பள்ளிக்குச் செல்லும் பொழுது ஜன்னல் வழியாகக் கைநீட்டி 'டாடா' சொல்லாமல் செல்லமாட்டாள். காலாற அவளுடன் மாலை வேளைகளில் வெளியே நடமாடச் செல்லும்போது, சாலை ஓரத்தில் உள்ள புளிய மரங்களிலிருந்து புளியங் காய்களைப் பறித்துக் கொடுத்தாக வேண்டும். என் தோள்களின் மீது ஏறி நின்று கைகளுக்கு எட்டும் காய்களைப் பறித்துக் கொள்வாள். கொடிக்காய்ப்புளி என்றும் கோணப் புளியங்காய் என்றும் சொல்லப் படும் காயை நான்தான் ரகசியமாக அவளுக்கு வாங்கித் தந்தாக வேண்டும். பள்ளிக் கூடத்தில் மற்றச் சிறுவர்கள் அதைக் கூறு கூறுகளாக வாங்கித் தின்பதைக் கண்ட அவளுக்குத் தானும் தின்ன ஆசை. ஆனால் அதற்கான காசு அவளிடம் கிடையாது. பெற்றோர் கையில் காசு கொடுக்க மாட்டார்கள். கண்டதை வாங்கித் தின்று உடல் நலனைக் கெடுத்துக் கொண்டு விடுவாள் என்பது அவர்களது பயம்.

ஒரு சமயம் என்னை அவள் காசு கேட்க, நான் எதற்கு என்று வினவ, கோணப் புளியங்காய் வாங்குவதற்கு என்று அவள் கூற, நான், ''காசு கொடுக்க மாட்டேன். வேண்டுமானால் கோணப் புளியங்காயே வாங்கித் தருகிறேன்!'' என்று சொல்லிப் பருத்தியைப் புடவையாகக் காய்க்கச் செய்தேன்.

அந்தக் காலத்தில் லல்லி என்னிடமே எப்பொழுதும் இருந்து கொண்டு என்னைச் சுற்றிச் சுற்றி வருவாள். உணவருந்தவும், தூங்கவும், பங்களாவிலிருந்து யாராவது வந்து அவளை அழைத்துச் செல்ல வேண்டும். அந்த வயதில் அவள் என்னிடம் என்ன ஆதர்சத்தைக் கண்டாளோ, தெரியவில்லை. அவள் ஆனந்திக்கும்போது கூடச் சேர்ந்து மகிழ்வதற்கும், வருந்தும்போது இதம் அளிப்பதற்கும் நான் தகுந்த தோழனாக இருந்தேன். நான் இராமாயணம், மகாபாரதம் முதல், விக்ரமாதித்தன், மதனகாமராஜன் பஞ்சதந்திரக் கதைகள், தற்காலக் குழந்தை இலக்கியக் கதைகள் வரை எல்லாம் சொல்லியாகிவிட்டது. கதைகளை நான் படுத்திருக்கும் போது தலைமாட்டில் அமர்ந்து கேட்பாள். பனி பெய்யாத இரவுகளிலும், நிலாக் காலங்களிலும் தோட்டத்தின் மையத்தில் உள்ள பெரிய ஊஞ்சல்தான் எங்களது இடம். இரவில் மலரும் மலர்கள் மணத்தைப் பரப்ப, செடிக்குச் செடி தாவும் மின்மினிப் பூச்



சிகளைப் பார்த்தபடி என்னுடன் பொழுதெல்லாம் பேசிக் கொண்டிருப்பாள்.

அந்த லல்லியை இன்று பெண் பார்க்க வருகிறார்கள்.

லல்லி அந்த இளம் வயதில் நன்கு வளர்ந்திருந்தாள். தலைவலி, காய்ச்சல் என்று அவள் சொல்லி நான் கேட்டதில்லை. இடுப்புக்கும் மேலாகக் கட்டிய பட்டுப் பாவாடை, கைகளை இறுகப் பிடித்திருக்கும் சாடின் அல்லது வெல்வெட் ஜாக்கெட், அழுந்த வாரிப் பின்னப் பட்ட நீண்ட சடைக்கு மேல் கூடைப் பூ, கழுத்தோடு இழைந்தாற்போல் நெக்லஸ் — இவற்றுடன் லல்லி அப்பொழுது நான் விக்ரமாதித்தனுக்குக் கதை சொல்லிவிட்டு இறங்கிய பதுமை போல் இருப்பாள்.

வயதுதான் பெண்களிடம் எத்தனை மாற்றத்தைக் காட்டிவிடுகிறது! இயற்கை அந்தச் சிறு அழகு உருவத்தை அழித்துவிட்டு இன்று புதிதாக அதிக அதிக எழிலுடன் லல்லியை எழுதி யிருக்கிறது.

லல்லி பெற்றோர்களுக்கு ஒரே பெண். அவளிடம் அவர்களுக்கு ஒரே குறை அவள் சிவப்

பாக இல்லாததுதான். இதனால் லல்லி கருப்பு நிறத்தினள் என்பதல்ல. நல்ல சிவப்பு இல்லாத ஒரு புது நிறம். அந்த நிறத்தில் அவளிடம் நான் குறை எதையும் காணவில்லை. நிறைவையே கண்டேன். அவளது அந்த நிறத்தில் பெண்மையின் அடக்கம் தெரிந்தது.

லல்லி என்னை நண்பனாக, ஆசிரியனாக, உற்றானாகக் கருதிய காலமெல்லாம் ஓர் ஆண்டு தான். அந்த ஓர் ஆண்டுக்குள் எத்தனை பேர் என்னென்ன விதமாக அவளையும் என்னையும் இணைத்துக் கேள்விகள் கேட்டிருப்பார்கள்!

''லல்லி! எங்கண்ணாவைக் கல்யாணம் பண்ணிண்டு பங்களாவுக்கே அவனைக் கூட்டிக் கொண்டு போயிடலாம்னு பார்க்கிறயா ?'' என்று என் இளைய சகோதரி கேட்பாள்.

''ஆமாம்!'' என்று தலையசைத்துத் தன் பெரிய கண்கள் ஒளி உமிழ நிற்பாள் லல்லி.

இரவு பத்து மணிக்கு மேல் என்னிடமிருந்து அவளைப் பிரித்துப் படுக்க அழைத்துச் செல்லும்போது, அவள் அன்னை, ''ஏண்டி, இயாகு மாமாவையே கல்யாணம் பண்ணிண்டுடேன். எப்பவும் மாமாகூட இருக்கலாம்!'' என்பாள்.

''ஆகட்டும்மா !'' இது லல்லியின் பதில்.

அவள் தகப்பனார் கேசவ மூர்த்தி, ''இயாகு! லல்லி உன்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போகிறாள். தயாராக இரு. வேறு எவள் கழுத்திலாவது தாலி கட்டிவிடப் போகிறாய்!'' என்பார் சிரித்துக் கொண்டே.

''ஆமாம், அப்பா! நான் மாமாவைத் தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்!'' என்று கொஞ்சலுடன் மொழிவாள் லல்லி.

இப்படியான பெரியவர்களின் வார்த்தைகள் அந்த இளம் உள்ளத்தில் என்ன எழுச்சியை உண்டு பண்ணினவோ ! கடைசியில் அவைகளே எங்கள் நட்புக்கு உலை வைத்தன.

இன்று லல்லியும் நானும் எங்களுக்குள் அந்நியர்கள். நான் யாரோ, அவள் யாரோ! ஒரே ஒரு விநாடிப் பொழுதில், காரணம் ஏதுமின்றி என்னிடமிருந்து தன்னை வெட்டிக் கொண்டு விட்டாள்.

ஒரு நாள் காலையில் லல்லி வீட்டினுள் வந்தாள். நான் படுக்கையை விட்டு இன்னும் எழவில்லை. கண்ணன் காலடியின் அருகில் பார்த்தன் உட்கார்ந்த மாதிரியில் என் கால்களின் அருகில் அவள் அமர்ந்தாள். நான் விழித்ததும் அவளைப் பார்த்தேன். செம்மை அவள் கன்னங்களில் பவளமாகச் சுழன்றது. நான் பார்த்த பொழுதில் கைகளால் முகத்தை மூடிக்கொண்டாள்.

எனக்கு இது புதுமையாக இருந்தது. நான் எழுந்து, ''என்ன லல்லி?'' என்று கேட்டு, இடது கையால் அவளது முகத்தைத் தடவினேன். அவள் நகர்ந்து எழுந்து நின்று கொண்டாள்.

''ஒன்றுமில்லை, மாமா!''

ஆனாலும் அவள் கண்கள் குறுகுறுவென்று என்னைத் துளைத்தபடி பார்த்தன. அந்தப் பார்வையே என்னை ஓரளவு கூச வைத்தது.

நான் பல் துலக்கச் சென்றபோது லல்லி கூட வந்து நின்றாள். எதுவுமே பேசாமல், என் முகத்தைப் பார்த்தபடியே விரல் நகத்தைக் கடித்துக் கொண்டு அவள் நின்றது எனக்கு விந்தையாக இருந்தது.

''என்ன, லல்லி, என்னவோ சொல்லணும், சொல்லணும்னு தயங்கி நிற்கிறாயே, சொல்லேன்!'' என்றேன்.

வெட்கம் கலந்த புன்னகை ஒன்றை உதிர்த்துவிட்டு அவள் நின்றாள்.

என் அறையில் கண்ணாடி முன்னால் நின்று நான் முக க்ஷவரம் செய்து கொள்ளத் தொடங்கினேன். லல்லி அருகில் நின்று கொண்டிருந்தாள்.

''மாமா!'' என்று மெல்லிய குரலில் கூப்பிட்டாள் லல்லி.

எதிரில் கண்ணாடியிலிருந்த முகத்தைத் திருப்பி அவளை நோக்கினேன்.

''மாமா! ஒண்ணு சொல்வேன், நீங்க ஒருத்தரிடமும் சொல்ல மாட்டேளே?''

''ஏன்?''

''சொல்லமாட்டேன்னு சொன்னாத்தான் நான் அதைச் சொல்வேன்!''

''சொல்ல மாட்டேன்!''

''மாமா.....!'' அவள் முகம் முழுதும் குங்குமம் குழம்பியது.

கையிலிருந்த ஷேவிங் கருவியை அருகில் வைத்துவிட்டு முகத்தில் சோப்பு நுரையுடன் அவள் பக்கத்தில் அமர்ந்தேன். அவள் சிறு தோளில் கைவைத்து, ''சொல்லு, லல்லி! நீ என்ன சொல்லப் போறே?'' என்றேன்.

''ஒருத்தரிடமும் சொல்ல மாட்டேளே ?'' என்று சந்தேகப் பார்வையுடன் சுற்றுமுற்றும் நோக்கினாள்.

''ஊகும்!''

''மாமா....!'' எதையோ சொல்ல வந்தவள் தன் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

''உம், சொல்லு!''

என் வலது காதுக்கருகில் முகத்தைக் கொண்டு வந்தாள் அவள்.

''மாமா, ஒங்களை நான் கல்யாணம் பண்ணிக்கிறதா சொப்பனம் கண்டேன்!''

என் காதருகில் அவளது இந்த வார்த்தைக்கான கிசுகிசுப்பை மட்டும் நான் கேட்கவில்லை, இந்த வார்த்தைகளைச் சொல்வதற்குள் அவளது இதயம் துடித்த துடிப்பையும் நான் கேட்டேன்.

நான் திகைத்தவாறு அவள் முகத்தை நோக்கினேன். அந்த நேரத்தில் சிவந்திருந்த அந்த முகம் சட்டென்று வெளுத்தது. என் கைகள் இரண்டையும் பற்றி அவற்றுள் முகம் புதைத்து அவள் கேவிக் கேவி அழுதாள்.

''லல்லி, லல்லி, ஏனம்மா, அழுகிறாய்? என்ன இது?'' அவளது முகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் எனது கைகளை எடுக்க மனமில்லாது நான் கேட்டேன்.

அவள் அந்த நிலையில் அப்படி என் கைகளில் முகம் பதித்து அழுதது அரை நிமிடத்துக்குள்தான் இருக்கும். மெதுவாகத் தாமரை மலர்வது போன்று தன் முகத்தை என் கைகளிலிருந்து உயர்த்தினாள். கண்களில் குளமாகக் கண்ணீர் தேங்கி நின்றது. உடனேயே தலை திருப்பி விருட்டென்று எதிர்ப் பக்கம் நடந்தாள்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவள் என்னிடம் பேசவில்லை. என் முகத்தை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. இன்று, 'பெண் பார்க்'கப்

# ஆபீஸ் வேலை தலைக்குமேல் — தலைவலியோ மண்டையைப் பிளக்கிறது!













## ஒரே ஒரு ஸாரிடான்

'ரோஷ்'



**வலியைப் போக்குகிறது ஆசுவாசப் படுத்துகிறது புத்துணர்ச்சி யூட்டுகிறது**

உலகப்புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் தலைவலி, பல்வலி, உடல்வலி மற்றும் சாதாரண உடற் கோளாறுகள் இவற்றிலிருந்து விரைவில், அபாயமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. பெரியவர்களுக்கு 1 வில்லை, குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.




ஸாரிடான் ஒரே வில்லை போதும்

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

படுவதற்காக மணப் பருவம் பெற்றுத் தயாராக இருக்கிறாளே, இந்த நேரம் வரை என்னை அவள் நெருங்குவதில்லை. அப்படி என்ன குற்றம் செய்தேன் நான்? அவள் கனவில் வந்து அவளை நான் மணந்தது என் தவறா? பெண்கள்தாம் எத்தனை சீக்கிரத்தில் தங்கள் உறவைக் கத்திரித்துக் கொண்டு விடுகின்றனர்!

பங்களாவிலுள்ளோரும், என் வீட்டாரும் இதைக் கண்டு முதலில் சில நாட்கள் அதிசயித்தனர். நாட்கள் செல்லச் செல்ல அவர்கள் இதைப் பெரிதாகக் கொள்ளவில்லை. நான் இருக்கும் பக்கம் தலை காட்டாத லல்லி, என் தாயிடமும், சகோதரிகளிடமும் எப்போதும்போலப் பழகி வந்தாள். இருந்தாலும் அவளது செயல் என்னை உள்ளூற வெகுவாகப் பாதித்தது. வீட்டைக் காலி செய்து கொண்டு போக நினைத்தேன். லல்லியின் செயலைச் சிறுபிள்ளைத்தனம் என்று தள்ள முடியவில்லை.

''சார்!'' என்று கூப்பிட்டபடியே ஒரு நாள் கேசவமூர்த்தியிடம் சென்றேன்.

''என்ன, இயாகு?'' என்று கேட்டார் அவர்.

''உங்கள் பெண் என்னுடன் பேசுவதில்லை. சண்டை போலிருக்கிறது. அதனால் நான் வீட்டைக் காலி செய்து கொண்டு போகிறேன்!'' என்றேன்.

''சே, சே! என்ன இது! நீயும் குழந்தை மாதிரி இருக்கிறாய்? உங்களுக்குள் என்ன சண்டை?'' என்று கேட்டார் கேசவமூர்த்தி.

''என்ன சண்டையோ, எனக்குத் தெரியாது! இத்தனை நாட்கள் இப்படிக் கூடக் கூடப் பழகிவிட்டு, திடீரென்று பேசாமல் சண்டைக்காரியாக மாறினால் நான் என்ன செய்வது? எனக்கு ரொம்ப சங்கடமாக இருக்கிறது. நான் இங்கே இருப்பது அவளுக்குத் துன்பமாக இருக்கும். அதனால்தான் வீட்டைக் காலி செய்து கொண்டு போகிறேன் என்கிறேன்!''

''நீ சும்மாயிரு. நான் அவளையே கூப்பிட்டுக் கேட்கிறேன்!'' என்று கூறி விட்டு லல்லியை அழைத்தார் கேசவமூர்த்தி.

புள்ளி மானைத் துள்ளி ஓடிவந்த லல்லி, என்னைப் பார்த்ததும் தயங்கினாள்.

''ஏம்மா, மாமாவோடு என்ன சண்டை?'' என்று கேசவமூர்த்தி கேட்டார்.

''சண்டையா, இல்லையே அப்பா!''

''இதோ பாரு, மாமா வீட்டைக் காலி செய்து கொண்டு போகிறேன் என்கிறார்!''

லல்லி நிமிர்ந்து தனது பெரிய கண்களால் என்னைப் பார்த்தாள். ''வீட்டைக் காலி செய்து கொண்டு போகக்கூடாதுன்னு சொல்லுங்கோ அப்பா!'' என்று தகப்பனாரிடம் கூறிவிட்டு, என்னைப் பார்த்து, ''ஏன் மாமா, வீட்டைக் காலி செய்கிறீர்கள்?'' என்றாள்.

''நீதான் முன்போல் என்னிடம் பேசுவதில்லையே!'' என்றேன் நான்.

''அதுக்காக...? பேசறதில்லைங்கிறதுக்காக வீட்டைக் காலி செய்யறதா? உங்ககூட எனக்கு என்ன பேச்சு? நான் பாட்டியிடம் சொல்லிக் கொள்கிறேன்!'' என்று கூறிவிட்டு உள்ளே ஓடினாள்.



''ரோசி! நேற்று இரவு சொப்பனத்தில் நான் உன்னிடம் வந்து என்னைக் கல்யாணம் செய்து கொள்வாயா என்று அன்போடு கேட்டேன்! நல்ல வேளை; நீ மாட்டேன்னு சொல்லிட்டே!''

---

அன்று மாலையில் என் தாயார் கேட்டாள்: ''கேசவமூர்த்தியிடம் நீ என்ன சொன்னே? லல்லி வந்து, வீட்டைக் காலி செய்துடாதேங்கோ பாட்டின்னு அழாதகுறையாகத் திருப்பித் திருப்பிச் சொல்லிட்டுப் போச்சு!''

அந்த லல்லியின் 'பெண் பார்க்கும் படல'த்துக்கு உதவ நான் தயாராகிக் கொண்டிருக்கிறேன்.

**மா**லை மூன்று மணி அளவில் பெண் பார்ப்பவர்கள் வந்தார்கள். பையன் ஆண்களில் அழகன்! லல்லிக்கு ஏற்றவன் என்று எண்ணிக் கொண்டேன்.

அவர்கள் வருவதற்கு முன்பாக வருபவர்களை வரவேற்று, உட்கார வைத்து, பெண்ணைக் கொண்டு வந்து காட்டுவதற்கான அறையை அலங்கரிப்பதில் நான் ஈடுபட்டேன். அறை ஜன்னல்களைத் துடைத்து என் கைகளாலேயே தூசு தட்டி, வேலையாட்களை விரட்டி அறையைச் சுத்தமாகக் கூட்டச் செய்து, பெரிய பெரிய ஜமக்காளங்களை அறை முழுதும் நீள விரித்து, சோபாக்களுக்குப் புது உறைகளிட்டு, அறை முழுதும் ஊதுவத்திப் புகையால் மணக்கச் செய்து, ஆண்டவன் படங்களுக்கு மலர் மாலைகளைச் சாத்தி, அந்தப் பொழுதுக்கென ஒரு புது உலகத்தையே அவ்வறையில் சிருஷ்டித்து வைத்தேன்.

அறை வாயிலில் ஒருமுறை வந்து நின்று லல்லி என்னை முகம் தூக்கிப் பார்த்துவிட்டுப் புன்னகையுடன் நகர்ந்தாள்.

பெண் பார்க்கும் பையனுடன் தந்தையும், தாயும் வேண்டியவர் யாரோ வேறு ஒருவரும்

வந்திருந்தனர். அனைவரையும் நன்கு விசாரித்துச் சோபாக்களில் உட்கார வைத்து உபசரித்தேன்.

சிற்றுண்டி ஆன பிறகு கேசவமூர்த்தி லல்லியை அழைத்தார். தாய் அணைத்து வர, லல்லி அலங்காரச் சிலையாக, சலனமற்ற கடலில் படகு நகர்ந்து வருவது போல வந்தாள்.

''எல்லாருக்கும் நமஸ்காரம் பண்ணு, அம்மா!'' என்றார் கேசவமூர்த்தி.

லல்லி தயங்கி நின்றாள்.

''இதோ இவர்தான் மாப்பிள்ளையின் தகப்பனார். இவருக்கு முதலில் நமஸ்காரம்பண்ணு. இவர் தாயார். இவர் அவர்களுக்கு வேண்டியவர். இவர்தான் மாப்பிள்ளைன்னு நான் சொல்லி உனக்குத் தெரிய வேண்டியதில்லை. அவருக்கு நமஸ்காரம் பண்ணு. அப்புறம் நம்ம தியாகு மாமாவுக்கு. கடைசியாக எனக்கு நமஸ்காரம் பண்ணு. அப்புறம் உள்ளே போய் அம்மாவுக்கு நமஸ்காரம் பண்ணு!'' என்றார் கேசவமூர்த்தி.

தயங்கியபடியே நின்றிருந்தாள் லல்லி. நான் நிமிர்ந்து அவள் முகத்தைப் பார்த்தேன். நெற்றியில் துளித் துளியாக அரும்பும் வியர்வையைக் கைக்குட்டையால் ஒற்றினாள். நான் நோக்கியதும் அவள் கண்கள் என்னைச் சந்தித்தன.

சட்டென்று குனிந்து லல்லி என்னை நமஸ்கரித்து விட்டு, கேசவமூர்த்தியையும் வணங்கி எழுந்து உள்ளே சென்று விட்டாள்.

ஒரு நொடிப் பொழுதில் இது நடந்துவிட்டது. இதை யாரும் எதிர்பார்க்கவில்லை.

பதறிய கேசவமூர்த்தி, ''லல்லி, லல்லி, இங்கே வா! என்னம்மா, இது?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்தார். நான் திகைப்படைந்து செய்வது அறியாது விழித்தேன்.

''என்ன, அப்பா!'' கேட்டபடியே நிதானமாகத் திரும்பி வந்தாள் லல்லி. அவள் முகத்தில் எவ்வித அசைவோ, மாற்றமோ இல்லை.

கேசவமூர்த்தி நிதானித்துக் கொண்டார். ''இவர்களுக்கு நமஸ்காரம் பண்ணாமல் போய் விட்டாயே! நமஸ்காரம் பண்ணும்மா!''

பெண் பார்க்க வந்திருப்பவர்களின் முகத்தை நான் பார்த்தேன். லல்லியும், வெட்கம் கூச்சம் இல்லாமல் அவர்களில் ஒவ்வொருவர் முகத்தையும் பார்த்தாள்.

''இவர்களுக்கெல்லாம் நமஸ்காரம் பண்ண வேண்டிய அவசியம் இல்லை, அப்பா! நீங்கள் சொன்னதற்காக வேண்டுமானால் பண்ணுகிறேன்!'' என்றாள்.

இடியால் தாக்குண்டவர் போல் கேசவமூர்த்தி கேட்டார். ''என்ன சொல்கிறாய் அம்மா, நீ?''

''அப்பா, என்னைக் கோபித்துக் கொள்ளாதீர்கள். நான் சின்னப் பெண்ணாக இருக்கும் போதே பெரியவர்களான நீங்கள் எல்லாரும் இந்தத் தியாகு மாமாவையும் என்னையும் இணைத்துவிட்டீர்கள். அந்த வயதிலிருந்தே தியாகு மாமாவை என் கணவராக எண்ணிக் கொண்டு விட்டேன். இத்தனை நாட்கள் என்னுள் கரை புரண்டு பெருகிய வெட்கத்தால் அவருடன் பேசாமலும், பழகாமலும் இருந்தேன். தியாகு மாமாவை மணப்பது என்பதே என் மனத்துள் ஆழப் பதிந்திருக்கிறது. அவருக்கே என்னைக் கல்யாணம் பண்ண ஏற்பாடு பண்ணுங்கள், அப்பா! நான் உள்ளே போகிறேன்!'' என்று சொல்லிவிட்டுப் பட்டுப் புடவை சரசரக்க லல்லி சென்று விட்டாள்.

பெண்பார்க்க வந்தவர்கள் ஒருவர்முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். எதிர்பாராத அதிர்ச்சியால் அவர்களால் எதுவுமே வாய் விட்டுச் சொல்ல முடியவில்லை. எழுந்து அவர்கள் வாயிற்பக்கம் நடந்தனர்.

அவர்கள் போவதைக் கண்ட கேசவமூர்த்தி சற்றே அசைந்து கொடுத்தார். அவமானத்தால் குறுகிவிட்ட அவர், போய்க் கொண்டிருப்பவர்களிடம் எதுவும் பேசவில்லை. நெற்றியில் கையூன்றி உட்கார்ந்த நிலையில் சோபாவில் சாய்ந்தார்.

நான் ஏதும் செய்ய முடியாதவனாக அவர் அருகில் அமர்ந்திருந்தேன்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு கேசவமூர்த்தி பேசினார். ''தியாகு! நீ வீட்டைக் காலி செய்து விடு!''

''ஆகட்டும்!'' என்பதற்கு அடையாளமாக நான் தலையை அசைத்தேன்.

அறை ஜன்னலுக்கு அப்பால் வெற்று வெளி நீண்டு கிடந்தது. அங்கே இந்த ஒற்றைப் பனை மரம் அசையாது நின்றது.

# டியாரா
# லானேலின் லோஷன் ஷாம்பு

## உங்கள் கூந்தலுக்கு புத்துயிர் அளிப்பது

● உலகப் புகழ் பெற்ற ஹெலன்கர்டிஸ் (USA) படைப்பு—ஒரு மிகச் சிறந்த ஷாம்பு ● லானேலின் உங்கள் கூந்தலுக்கு வளமளித்து, இதர ஷாம்புக்களின் உபயோகத்தால் இழந்த, மிகத் தேவையான எண்ணெய்த் தன்மையை மீளச் செய்கிறது ● ஏராளமான மென்நுரை எழுப்பி, மிக விரைவில் உங்கள் கூந்தலின் தூய்மையை ஒளிரச் செய்கிறது ● முதல் உபயோகத்திலேயே உங்கள் குழலின் முழுமையை திகழச் செய்து, வியப்பூட்டும் எழிலையும், ஒளியையும் மிளிரச் செய்கிறது ● இன்றே ஒரு டியாரா தர மாறுங்கள். உங்களுக்கென்றே உங்கள் பேரழகு மேலும் திகழ, மிகச் சிறந்த முறையில் தயாரிக்கப் பெற்றது.



Helene Curtis

*where beautiful young ideas begin*

**ஹெலன் கர்டிஸ்**

இந்தியாவில் தயாரித்தவர்
ஜெ. கெ. ஹெலன் கர்டிஸ் (லிட்.)
பம்பாய் - 1.

ஜெ. கெ. ஹெலன் கர்டிஸ கூட்டுடன் சேர்ந்த பெமினா மிஸ் இந்தியா 1967 போட்டியில் கலந்து கொள்ளுங்கள்




- நூலகத்துறையில் ஒரு முத்து
- ஐ. நாவில் எம். எஸ்.
- ரேஷன் தொல்லை!
- குழந்தைகள் பிச்சை!

'நூலகத் துறையில் ஒரு முத்து' என்ற சிறப்புக் கட்டுரையைக் கண்டு அவரது முந்நாள் மாணவன் என்ற முறையில் பெருமையடைகிறேன். திரு திருமலை முத்துஸ்வாமியிடம் கண்டிப்பும் இருக்கும்; கரைகாண இயலா அன்பும் இருக்கும். கண்டிப்புக்கு உதாரணம்; வகுப்புக்கு ஒரு நிமிடம் தாமதமானாலும் உள்ளே அனுமதிக்க மாட்டார். அன்புக்குச் சான்று: எந்த நேரமும் யாரும் அவரிடம் அணுகினால் அன்போடு உரையாடும் தன்மை.

பெரிதும் முயற்சி எடுத்துத் தமிழகத்திலேயே முதன் முதலாக நெல்லை மாவட்டம் நாங்குநேரியில் நூலகம் ஒன்றைத் திறந்து, தம் சொந்தச் செலவில் அறிஞர்கள் பெருமக்கள் பலரை வரவழைத்து விழா நடத்தி நூலகர்களுக்கு எடுத்துக்காட்டான முறையில் அதில் கௌரவநூலராகப் பணியாற்றிய பெருமையும் இவருக்கு உண்டு.

இராமநாதபுரம் — இரா. சேதுராமன்
22–10–66 — தலைவர், இராமநாதபுரம் மாவட்ட நூலக ஆணைக் குழு

அக்டோபர் 28-ஆம் தேதி வெள்ளியன்று இரவு 9–30 மணிக்கு ஒலிபரப்பான ஸ்ரீமதி எம். எஸின் கச்சேரி அற்புதமானதாக இருந்தது.

நாம் ஐ. நா. சபைக்குச் சென்று கேட்க முடியாவிட்டாலும் ரேடியோ வைத்திருப்பவர் ஒவ்வொரு வீட்டிலும் ஐ. நா. சபையே வந்து விட்டது! ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரி — ஊதாண்ட் அவர்களின் பாராட்டுரை முதலியவற்றைக் கேட்கச் செய்த வானொலி நிலையத்தாரைப் பாராட்ட வேண்டும்.

இவ்வாரக் கல்கியில் ராஜாஜியின் ஆங்கிலப் பாடலை வெளியிட்டதால் ஸ்ரீமதி எம். எஸ். பாடும்போது புரிந்துகொள்ள மிகவும் சௌகரியமாக இருந்தது. அற்புதக் கருத்துக்கள் நிறைந்த அப்பாடலை அழகாக, சிறப்பாகப் பாடினார் அவர்.

கோவை
29–10–66 — ந. உமாமாலு

ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் குரல் வளம் வியக்கத் தகுந்தது. அதன் இனிமையையும் குழைவையும், பாவங்களையும் கேட்டு வெளிநாட்டுக்காரர்களும் எவ்வளவு தூரம் ரசிக்கிறார்கள் என்பதற்கு அவர் பாடிய ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் ஒலித்த கையொலிகளே சான்று.

அருப்புக்கோட்டை,
29–10–66 — நா. அருங்குணநாதன்

எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் அன்றையக் கச்சேரியை மறக்க இயலாது. வயலின், கடம் வாசித்தவர்கள் தனிச் சிறப்புடன் வாசித்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. பாரத நாட்டுக் கலையைப் பாரெல்லாம் தம் குரல் மூலம் ஒலிக்கச் செய்யும் ஸ்ரீமதி எம். எஸ். எஸ். அவர்களைப் பற்றிக் கல்கியில் வெளியாகும் கட்டுரைகளும், படங்களும் தனிச் சிறப்புடன் திகழ்கின்றன.

நாவினிப்பட்டி
30–10–66 — சர்தார்மன்சூர்

எங்களுக்குப் போடும் ரேஷனில் இருந்து கொஞ்சம் அரிசியை மாதிரிக்கு அனுப்பியுள்ளேன். நீல வண்ணத்தில் உள்ளது. ஐந்து அரிசிக்கு ஓர் அரிசி இம்மாதிரி இருக்கிறது. சமையல் செய்தால் சோறு நீலம் கலந்திருக்கிறது. எந்த அதிகாரி, என்ன நோட்டத்தில் வாங்கினாரோ, அதை நாங்கள் அனுபவிக்கிறோம். சர்க்கார் ஆட்சி முறையினால், கண்ட்ரோல், ரேஷன் இவைகளினால் இதைச் சாப்பிட வேண்டியுள்ளது. இத்துன்பம் எத்தனை நாளைக்கோ, அந்த நீல வண்ணக் கண்ணனுக்கே தெரியும்!

சேலம்
29–10–66 — என். லக்ஷ்மிநாராயணன்

இக்கடிதம் எழுதியவர் பொட்டலத்தில் அனுப்பியிருக்கும் அரிசி கருநீல நிறத்தில் பார்க்கவே அருவருப்பாக இருக்கிறது. — ஆசிரியர்

இங்குள்ள ஆரம்பப் பாடசாலைகளில், அப்பள்ளிகளின் நலத்துக்காக, ஆசிரிய ஆசிரியைகள் சிறுமிகளைப் பணம் வசூலிக்கும்படி வேண்டுகிறார்கள். ஒரு நாள் பேருந்து நிலையம் வழியாக நாங்கள் இருவரும் சென்றுகொண்டிருந்த பொழுது, கையில் தாள் வைத்துக் கொண்டு, ''அண்ணாச்சி, காசு கொடுங்க. ஒரு கட்டம் பத்து பைசா'' என்ற குரல் எழுப்பி வந்த இரு சிறுமிகளைச் சந்தித்தோம்.

குழந்தைகளின் ஏக்கம் கலந்த பார்வைக்கு இரங்கிப் பத்து பைசா கொடுத்து ஒரு கட்டத்தில் கையெழுத்திட்டேன். அப்போது அவ்வழியாக வந்த ஒரு பெரியவர், 'பச்சிளம் குழந்தைகளைப் பிச்சை எடுக்க வைத்திருக்கிறார்கள் போலிருக்கிறது' என்று கூறிச் சென்றார்.

'ஏற்பது இகழ்ச்சி' என்ற ஔவையாரின் அறிவுரையைப் போதிக்கும் அதே ஆசிரிய ஆசிரியைகள் குழந்தைகளை இப்படி வீதிகளில் போய்க் காசைக் கெஞ்சிக் கேட்கும்படி செய்வது முறையாகுமா? இந்நிலை நீடிப்பின், குழந்தைகளின் மனம்தான் பக்குவப் படுமா? அல்லது கல்வித் தரம்தான் நாட்டில் முன்னேறுமா?

பாளையங்கோட்டை — பி.எஸ்.சண்முகசுந்தரம்
30–10–66 — ஜெ.ஜெயசீலன் கனகராஜ்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor:, T. Sadasivam.

# கோலாகலமாக அணியுங்கள் பிரின்டுகளை!

# மபத்லால் க்ரூப்

டெபிஸேஸ்டு பிரிண்டெட் பாப்ளின்கள்

தவிர. 'டெரீன்'/காட்டன்.
ம:.பினிஸ்டு மற்றும் ஸ்ட்ரெச்
தரங்களிலும் கிடைக்கின்றன.








நியு ஷாராக் (ஷாராக்) அஹமதாபாத்
நியு ஷாராக், நடியாத். ஸ்டேன்டர்ட்,
பம்பாய். ஸ்டேன்டர்ட், (நியு சைஜு),
பம்பாய். ஸ்டேன்டர்ட், தேவாஸ்
ஸாஸூன், பம்பாய். ஸாஸூன், (நியு
யூனியன்) பம்பாய். ஸூரத் காட்டன்,
ஸூரத். மபத்லால் பைன், நவ்ஸாரி

LPE Alyars. M-108A TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 35 சதம்
தபால் செலவு தனி






**நீங்கள் அவனுக்கு மிருதுவாய் வேபோரப்பைத் தடவும் போதே சூடு பிறந்து, இதமும் ஏற்படுகிறது....உங்கள் குழந்தை வசதியாய் மூச்சுவிட முடிகிறது. இரவு முழுதும் நல்ல தூக்கம் அவனுக்கு**

வசதிக்கு உங்களைத்தான் நம்புகிறான் குழந்தை. ஜலதோஷத்தினால் அவன் பாதிக்கப்படும்போது விக்ஸ் வேபோரப்பைத் தடவினால் போதும்.

உங்கள் அன்புக் கரங்கள் அவனுடைய மார்பு, தொண்டை, முதுகு, மூக்கின் சுற்றுப்புறம் ஆகியவற்றின்மீது விக்ஸ் வேபோரப்பைத் தடவுகின்றன. மூக்கடைப்பு கரைவதைக் கண்முன்னால் பார்க்கலாம். மீண்டும் அவன் சௌகரியமாய் சுவாசிக்கிறான். காரணம்: ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட பகுதிகளை இதமான, ஆவி வடிவிலுள்ள மருந்துகள் ஏழு விநாடிகளில் அடைகின்றன. இனி குழந்தையைப் படுக்க விடுங்கள். குழந்தை நன்றாகத் தூங்கும் பொழுது, இரவு முழுவதும் வேபோரப் தன் பணியைத் தொடர்ந்து செய்கிறது. விடிவதற்குள் ஜலதோஷம் அநேகமாய் நீங்கி, உங்கள் பிரியத்துக்குப் பாத்திரமான விளையாட்டுப் பிள்ளை உற்சாகத்துடனும், உடல் நலமுடனும் விழித்தெழுகிறான்.




NAS 6233c

**விக்ஸ் வேபோரப்** ஜலதோஷத்துக்கு இன்றிரவே தடவுங்கள்